# Macmillan's Story Readers

## SECOND READER



# இரண்டாவது கதாவாசக புஸ்தகம்







TAMIL

# STORY READERS

## SECOND READER

FOR

CLASS III

---

இரண்டாவது

# கதா வாசக புஸ்தகம்

மூன்றாவது வகுப்புக்கு



BY

T. CHELVAKESAVAROYA MUDALIAR, M.A.

*Professor of Tamil, Pachaiyappa's College*

REVISED EDITION

MACMILLAN & CO., LIMITED

MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON

1922



**Price, 4 Annas]** [விலை, ச அணா

# முகவுரை

இந்த வகையைச்சேர்ந்த வாசக புஸ்தகங்களிலுள்ள பாடங்கள் பெரும்பாலும் கதைகளாக இருப்பதால், இப்புஸ்தகங்கள் கதா வாசக புஸ்தகங்கள் என்று பெயரிடப்பெற்றன. சிறுவர்களுக்கு வாசகத்தில் பிரியமும் ஊக்கமும் உண்டாகும் பொருட்டே இவை எழுதப்பெற்றன.

ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு நீதிமார்க்கத்தைப் போதிப்பதால், இந்தப் புஸ்தகங்களைச் சன்மார்க்க போதக புஸ்தகங்கள் என்றும் சொல்லலாம். இவற்றின் முதலிலுள்ள அட்டவணையில் கதைகளுக்குப் பொருத்தமான நீதிகள் எழுதப்பெற்றிருக்கின்றன. உண்மை—தெய்வபக்தி - வணக்கம் – பெற்றோரிடத்தில் அன்பு - மரியாதை – விவேகம் - ஜீவகாருண்யம் ஆகிய இவற்றால் வரும் மேன்மையும், உழைப்பினாலும் விடாமுயற்சியாலும் உண்டாகும் நன்மைகளும் கதை ரூபமாக விளக்கப்படுகின்றன. பொய் பேசுதல் – களவு – மோசம் – கோபம் - வீண்பெருமை - சோம்பல் – அவசரம் முதலியவற்றால் வரும் கெடுதிகளும் காட்டப்படுகின்றன. சிறுவர்களுக்கு வெறும் நீதிகளைப் போதிப்பதைக் காட்டிலும் அவற்றைச் சிறு கதைகள் ரூபமாகக் கற்பித்தலே சிறந்த போதனாமுறை என்பது எல்லாரும் அறிந்த விஷயமே.

இந்தக் கதைகளில் அநேகம் யாவருக்கும் தெரிந்தவை. ஈஸாப் என்பவர் இயற்றிய கட்டுக்கதைகளிலிருந்தும், பஞ்சதந்திரத்தி லிருந்தும் எடுத்தவை பல. சில கதைகள் மகா பாரதத்திலிருந்து எடுத்தவை. நான்காவது, ஐந்தாவது, ஆறாவது கதாவாசக புஸ்தகங்களில், இந்துதேச சரித்திரம், இங்கிலாந்தின் சரித்திரம் இவற்றிலுள்ள சில கதைகளும், இந்துக்களிலும், மகம்மதியர்களிலும் கீர்த்திமான்களாக இருந்த சிலருடைய சரித்திரமும், சென்னைவாசிகளில் அநேகம் பிரமுகர்களுடைய வரலாறும் அடங்கியிருக்கின்றன.

பலவகையான உருவப்படங்கள் இந்த வாசக புஸ்தகங்களில் அங்கங்கே அமைந்துள்ளன. இவற்றுள் அநேகம் இந்தப் புஸ்தகங்களுக்காகவே செய்யப்பட்டவை. இப்புஸ்தகங்களைத் தனியாகவும் வேறு புஸ்தகங்களோடு கலந்தும் உபயோகிக்கலாம்.

# பொருள் அட்டவணை

பாடம் பக்கம்

# கற்பிக்கும் முறை

1. இந்த வாசக புஸ்தகத்தில் ஒவ்வொரு பாடத்திலும், ஒவ்வொரு நல்ல படம் இருக்கிறது. சில பாடங்களில் இரண்டு படங்களும் உண்டு. புஸ்தகங்களை அழகுபடுத்திச் சிறுவர்களுடைய மனத்தை வசீகரித்து வாசகம் படிப்பதில் அவர்களுக்கு ஊக்கம் அளிப்பதே இப்படங்களைப் பதிப்பித்ததின் உத்தேசம். உபாத்தியாயர் பிள்ளைகளுக்குப் பாடங்களைச் சுலபமாகக் கற்பிப்பதற்கும் இப்படங்கள் உதவியாக இருக்கும்.

2. உபாத்தியாயர் ஒரு பாடத்தை ஆரம்பிக்கும் முன்னே, அதில் உள்ள படத்தைப் பார்க்கும்படி பிள்ளைகளுக்குச் சொல்ல வேண்டும். படம் எதைப்பற்றினது என்று முதலில் பிள்ளைகளைக் கேட்டுவிட்டு உபாத்தியாயர் படத்தில் உள்ள ஒவ்வொரு பொருளையும் காட்டிப் படத்தின் விவரங்களையெல்லாம் அவர்களுக்கு விளக்கமாகச் சொல்லவேண்டும்.

3. பிள்ளைகள் ஒரு பாடத்தில் உள்ள படத்தைப்பற்றிய விஷயங்களையெல்லாம் அறிந்த பிறகு, உபாத்தியாயர் அந்தப் பாடத்தில் உள்ள கதையைக் கூடுமானவரையில் விநோதமாகத் தம்முடைய வார்த்தையாலே பிள்ளைகளுக்குச் சொல்லவேண்டும். சொல்வதை நன்றாகச் சொன்னால் பிள்ளைகள் மிகவும் பிரியமாகக் கேட்பார்கள்.

4. உபாத்தியாயர் அவ்விதமாகக் கதையைச் சொல்லி முடித்த பிறகு, தாம் சொல்லிய விதமாகவே பிள்ளைகளையும் சொல்லச்சொல்ல வேண்டும். ஒரு சிறுவன் கொஞ்சதூரம் கதையைச் சொன்ன பிறகு, மற்றொருவனைத் தொடர்ச்சியாகச் சொல்லச் சொல்லி அப்படியே கதை முடிகிறவரையில் மற்றவர்களையும் சிறிது சிறிதாகச் சொல்லும் படி செய்யலாம்.

5. பிள்ளைகள் படத்தின் விவரத்தை நன்றாக அறிந்துகொண்டு, கதையைச் சொன்னபிறகு, உபாத்தியாயர் அவசரப்படாமல் அந்தப் பாடத்தைத் தெளிவாக ஒவ்வொரு வாக்கியமாக வாசித்துக் காட்டி அவர்களையும் அப்படியே வாசிக்கச் சொல்லவேண்டும்.

6. கடைசியில், ஒவ்வொரு பையனும் ஒவ்வொரு வாக்கியமாகக் கெட்டியாக வாசித்துக் கதையை முடிக்கவேண்டும். பாடத்தைப்பற்றி ஒன்றும் தெரிந்துகொள்ளாமல் வாசிப்பதைவிட, இவ்விதமாக எல்லா விஷயங்களையும் முதலில் அறிந்துகொண்டு பிறகு பாடத்தை வாசிப்பது பிள்ளைகளுக்கு மிகவும் சுலபமாக இருக்கும்.

7. முதலாவது இரண்டாவதான கீழ்வகுப்புக்களிலும் மூன்றாவது வகுப்பிலும், பிள்ளைகள் ஒரு கதையைப் படித்து அதன் விஷயங்களை நன்றாக அறிந்தபிறகு, கதையை ஒரு நாடகம்போல் நடிக்கச்செய்வது பாடத்திற் பிள்ளைகளுக்கு ஊக்கத்தை உண்டாக்கும். கதையின் ஒவ்வொரு பாகத்தை ஒவ்வொரு சிறுவன் நடிக்கலாம்.

8. உதாரணமாக, முதலாவது புஸ்தகத்தில், சோம்பேறிப் பையனைப்பற்றிய 4-வது கதையைக் காட்டுகிறோம். வகுப்பில் ஒரு சிறுவனைச் சோம்பேறிப் பையனாக ஏற்படுத்திக்கொள்ளலாம். வகுப்பின் ஒரு பாகத்தை அவன் வீடாகவும், ஒரு பலகையை அவன் படுத்திருக்கிற கட்டிலாகவும் வைத்துக்கொள்ளலாம். மற்றொரு பிள்ளை, சோம்பேறிப் பையனுடைய தாயாக ஏற்பட்டு, தூங்குகிறவனை எழுப்ப, அவன் விழித்துக்கொண்ட பிறகு, அவனைப் பாடசாலைக்குப் போகச் சொல்லலாம். பள்ளிக்கூடத்தையே வயலாகப் பாவித்து, அதில் சோம்பேறிப் பையன் நடந்துபோவதாக நடிக்கலாம். அப்போது வேறொரு பிள்ளை, "கா கா" என்று கூவி, காக்கையாக நடிக்கலாம். இரண்டு மூன்று பிள்ளைகள் தேனீக்களைப்போல உங்காரம் செய்துகொண்டிருக்கலாம். வேறு சில பிள்ளைகள் எறும்புகளாக நடிக்கலாம். இவர்கள் இங்கும் அங்கும் ஒவ்வொரு கூட்டமாக இருக்கவேண்டும். அந்த அந்த ஜந்து, அந்த அந்தப் பாடத்தில் என்ன என்ன சொல்லுகிறதாக இருக்கிறதோ, அந்த அந்த விதமாகவே அந்த அந்தப் பிள்ளைகள் சொல்லவேண்டும். இவ்விதமாக அந்தப் பாடம் முழுவதையும் ஒரு சிறு நாடகமாகப் பிள்ளைகளைக்கொண்டு நடித்துக் காட்டலாம்.

ஒரு பாடத்தை ஒரு முறை நடித்தானபிறகு, அந்தப் பாடத்தையே வெவ்வேறு பிள்ளைகள் வெவ்வேறு பாகங்களை நடிக்கும்படி பலமுறை செய்து காட்டலாம். இதனால், ஒவ்வொரு பிள்ளையும் பாடத்திலுள்ள பல பாகங்களையும் நடிக்க இடம் உண்டாகும்.

9. இங்ஙனம் ஒரு பாடத்தைக் கற்பிப்பதில் அனுசரிக்கும் முறை யாவது:—

1. படத்தை விளக்குவது: 2. கதையைச் சொல்லுவது: 3. பிள்ளைகளைக் கதையைச் சொல்லச் செய்வது: 4. பாடத்தை வாசிப்பது: 5. பிள்ளைகளைப் பாடத்தை வாசிக்கச் சொல்லுவது: 6. கதையை நாடகமாக நடிப்பித்தல்.

---

இரண்டாவது

# கதா வாசக புஸ்தகம்.

## 1. "வா என்பதற்கும் "போ என்பதற்கும் வித்தியாசம்.

1. மைசூரில் சங்கரராவ் என்று ஒருவர் இருந்தார். அவருடைய தகப்பனார் மைசூர் சமஸ்தானத்தில் அநேக காலம் உத்தியோகத்திலிருந்து பல நன்மைகளைச் செய்தவர். அதனால், அரசன் அவரிடம் மிக்க திருப்தி அடைந்து, வருஷத்தில் 1,000 ரூபா கிடைக்கத் தகுந்த நிலத்தை அவருக்கு இனமாகக் கொடுத்தான்.

2. சங்கரராவ் சிறிது கர்வம் உள்ளவர்: எதிலும் கவலை அற்றவர். அவர், பயிர் நிலங்களைத் தாம் போய்ப் பார்வையிடுவது இல்லை: உழுது பயிர் செய்யும்படி பண்ணையாட்களைத் திட்டம் செய்துவிட்டு, வீட்டிலேயே இருப்பார். அதனால், அவருக்கு வரும்படி குறைந்து, நான்கு வருஷ காலத்தில் கடன் அதிகரித்தது. கடன் கொடுத்த வியாபாரி கடனைக் கொடுக்கும்படி நிர்ப்பந்தம் செய்யத் தொடங்கினான். அந்த நிர்ப்பந்தம் பொறுக்க முடியாமல், சங்கரராவ், தம்முடைய நிலத்திற் பாதியை விற்று, கடனைத் தீர்த்துவிட்டார். தாமே பயிரிடுவிதனால் லாபம் இல்லை



யென்று, மற்றப் பாதியை வீரப்பன் என்னும் ஒரு குடியானவன் இடத்தில் குத்தகைக்கு விட்டு வைத்தார்.

3. வீரப்பன் என்பவன் அதிக உழைப்பாளி. அவன் தினந்தோறும் தானே வயலுக்குப் போவான். ஒரு கூலியாளை வைத்துக்கொண்டு, அவனுடன் தானும் கஷ்டப்பட்டு ஏர் உழுவான்.

வயல்களில் மிகுதியாக எரு அடித்து நல்ல விதை களாகப் பொறுக்கி விதைப்பான். தான் ஒப்புக் கொண்ட குத்தகை யளவைப்போல நான்கு பங்கு அவனுக்கு விளைவு கிடைத்து வந்தது. தான் உண்டது போக, மிகுந்ததை விற்றுப் பண மாக்கிச் சேர்த்து வந்தான். தம்படிகூட வீண் செலவு செய்யாமையால், ஐந்து வருஷத்தில் அவன் ஒரு பெரிய முதலாளி யாகிவிட்டான்.

4. ஐந்தாவது வருஷம், குத்தகை கொடுப்ப தற்கு வீரப்பன் சங்கரராவிடம் போனான். அதைச் செலுத்திவிட்டு, "ஐயா! என்னிடம் குத்தகைக்கு விட்டிருக்கும் நிலத்தை நீங்கள் விற்பதாகக்கேள் வியுற்றேன். அது உண்மையானால், பிறர் கொடுக் கும் தொகையை நானே கொடுக்கிறேன். வேறு யாருக்கும் விற்கவேண்டாம்; என்னிடமே விற்று விடுங்கள்" என்று கேட்டுக்கொண்டான்.

5. சங்கரராவ் ஆச்சரியம் அடைந்து, "உன் னிடம் குத்தகைக்கு விட்டிருக்கும் நிலத்தைப் போல இரண்டுபங்கு நிலம் வைத்திருந்தேன். தீர்வை கட்டுகிற அவசியமும் இல்லை. அப்படி யிருந்தும் கடன்பட்டுப் பாதியை இழந்துவிட் டேன். இப்பொழுது நீ பயிரிடுவது என்னிடத் தில் இருந்த நிலத்திற் பாதிதானே. எனக்குச் சேரவேண்டியதையும் சரியாகக் கொடுத்துவிடு கிறாய். ஐந்து வருஷத்தில் அந்த நிலத்தையே வாங்கக்கூடிய பணத்தையும் சேர்த்துவைத்திருக் கிறாய். இந்த உபாயம் எனக்கு விளங்கவில் லையே" என்றார்.

6. வீரப்பன், "ஐயா, உபாயம் ஒன்றும் இல்லை. ஒரே வார்த்தைதான் நீங்கள் 'போ' என்பீர்கள்;

நான் 'வா' என்பேன். அதுதான் உங்களுக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம்" என்று சொன்னான்.

7. சங்கரராவ், "உன் கருத்து விளங்கவில்லை. நான் யாரை 'போ' என்று சொன்னேன்? நீ யாரை 'வா' என்று அழைத்தாய்?" என்று கேட்டார்.

8. வீரப்பன், "ஐயா, பயிர் நிலங்களை நீங்களே போய்ப் பார்வையிடுவதில்லை. பண்ணை யாட்களைப் போய் வயலை உழும்படி சொல்லி வந்தீர்கள். பார்வையிடுவார் ஒருவரும் இல்லாவிட்டால், அவர்கள் சரியாக வேலை செய்யமாட்டார்கள்; அரை குறையாகத்தான் செய்வார்கள். அல்லாமலும் நீங்கள் வீட்டிலே இருந்து பகலில் பாதிவேளை தூங்கிக்கொண்டு இருப்பீர்கள்."

9. "நானோ அப்படியெல்லாம் செய்வதில்லை. அதிகாலையில் எழுந்திருக்கிறேன். என் பண்ணை ஆளைக் கூடவே வரச்சொல்லி அழைத்துக்கொண்டு வயலுக்குப் போகிறேன். நான் அவனோடு கூடவே வேலை செய்கிறேன். 'இதைச் செய்,' 'அதைச் செய்' என்று வேலை வாங்குகிறேன். நான் வருகிறவரையில் அவனும் கூடவே இருந்து வேலை செய்கிறான். பகலெல்லாம் கஷ்டப்பட்டு வேலை செய்கிறோம். இரவில்தான் வீட்டுக்கு வருகிறோம். எனக்கு லாபம் கிடைப்பதற்கும் உங்களுக்கு லாபம் கிடைக்காததற்கும் இது தான் காரணம்" என்று விளக்கினான்.

## 2. வரப்புயர.

வரப்புயர நீருயரும்
நீர் உயர நெல் உயரும்
நெல் உயரக் குடி உயரும்
குடி உயர முடி உயரும்.

## 3. யானைகளை அப்பாஜி பங்கிட்டுக் கொடுத்தது.

1. விஜயநகரத்தில் வேலுசெட்டி என்ற ஒரு வியாபாரி இருந்தான். அவனுக்கு மூன்று பிள்ளைகள் உண்டு. சாகிற சமயத்தில், அவர்களுக்குத் தன் ஆஸ்தியைப் பிரித்துக்கொடுக்க எண்ணி, அவர்களை அழைத்தான்.

2. பிள்ளைகளை நோக்கி, செட்டியானவன், "மக்களே! எனக்குச் சாகிறகாலம் வந்துவிட்டது. நான் கூட எடுத்துக்கொண்டு போகப் போகிறது ஒன்றும் இல்லையே. என்னிடம் உள்ளவற்றையெல்லாம் உங்களுக்குக் கொடுக்கிறேன். வீடுகளும், தோட்டங்களும், நிலங்களும், பணமும், நகைகளும், ஆடுமாடுகளும் விசேஷமாக இருக்கின்றன."

3. "இவையல்லாமல் என்னிடம் 17 யானைகள் உண்டு. அவையெல்லாம் உத்தமலக்ஷணம்

உள்ளவை. அவைகளை விற்காமல் ஜாக்கிரதை யாகக் காப்பாற்றுங்கள். யானைகளிற் பாதியை மூத்த பிள்ளைக்கும், மூன்றில் ஒரு பங்கை இரண் டாம் பிள்ளைக்கும், ஒன்பதில் ஒரு பங்கை மூன் றும் பிள்ளைக்குமாகக் கொடுக்கிறேன். ஒவ்வொ ருவரும் அவரவர் பங்கை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளவேண்டும். மற்றச் சொத்துக் களைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளுங்கள்" என்று சொன்னான் சொல்லி முடித்த சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் இறந்து போய் விட்டான்.

4. தகப்பனுக்குச் செய்யவேண்டிய உத்தரக் கிரியைகளை யெல்லாம் சரியாகச் செய்தார்கள். எல்லாம் செய்து முடித்தபிறகு, தகப்பன் திட்டம் செய்தபடி, சொத்துக்களை யெல்லாம் சமமாகப் பங்கிட்டுக்கொண்டார்கள்.

5. யானைகளைப் பங்கிட்டுக்கொள்ளுகிற விதம் மட்டும் இன்னதென்று தோன்றவில்லை. இரண் டினாலும் மூன்றினாலும் ஒன்பதினாலும், மிச்சம் வராமற் பதினேழை வகுக்க முடியுமா? பல பேரைக் கேட்டார்கள். ஒருவராலும் சரியாகப் பங்கிட முடியவில்லை. கடைசியாக மூத்தவன், "ராயருடைய மந்திரியான அப்பாஜியைப் போய்க் கேட்டுக்கொள்ளலாம். அவர் நல்ல புத்தி சாலி, இந்த விவகாரத்தை அவர் ஒழுங்கு படுத் தாவிட்டால், வேறு யார்தான் செய்யக்கூடும்?" என்று சொன்னான்.

6. அருமையான நல்ல காணிக்கைகளை எடுத் துக்கொண்டு, அவர்கள் மூவரும், அப்பாஜி வீட் டுக்குப் போய், மரியாதையாக வணங்கி, தங்கள்



விவகாரத்தைச் சொல்லிக்கொண்டார்கள். அவர்கள் வார்த்தையைக் கேட்டு, அப்பாஜி, "நல்லது, நான் உங்கள் வீட்டுக்கு வந்து, உங்கள் தகப்பனார் திட்டம் செய்தபடியே யானைகளைப் பங்கிட்டுக் கொடுக்கிறேன். நீங்கள் போய் வாருங்கள். நாளைக் காலையில் வருவேன்" என்று சொல்லி அனுப்பினார்.

7. அப்படியே அப்பாஜி மறுநாள் தம் யானையின்மேல் ஏறிக்கொண்டு வர்த்தகன் வீட்டுக்குப் போனார். அவன் குமாரர்கள் அவரை மரியாதையாக எதிர்கொண்டு, உயர்ந்ததோர் ஆசனத்தில் உட்காரவைத்தார்கள். உடனே அப்பாஜி, "உங்கள் யானைகள் பதினேழையும் கொண்டுவாருங்கள்" என்றார். அப்படியே அவர்கள் யானைகளைக் கொண்டுவந்து வரிசையாக நிறுத்தினார்கள்.

8. அப்பாஜி, "சரி, என் யானையையும் அவைகளோடு நிறுத்தி, ஒவ்வொரு பிள்ளையும் தனக்குரிய பாகத்தை எடுத்துக்கொள்ளலாம்" என்றார். அப்பாஜியின் யானையும் தங்கள் கணக்கில் சேரும் என்று அவர்கள் சந்தோஷமாக இருந்தார்கள்.

9. மூத்தவன் 9 யானைகளும், நடுப்பிள்ளை 6 ம், கடைசிப்பிள்ளை 2 ம் ஆக எடுத்துக்கொண்டார்கள். "அவரவருக்குச் சேரவேண்டிய பாகம் சரியாகச் சேர்ந்துவிட்டதா?" என்று அப்பாஜி கேட்டார். "ஆம், சேர்ந்துவிட்டது" என்றார்கள். "அப்படியானால் என் யானையை இங்கே கொண்டுவந்து நிறுத்துங்கள்" என்று சொல்லி, அப்பாஜி தன் யானைமேல் ஏறிக்கொண்டு வீட்டுக்குப் போய்விட்டார்.

10. அப்பாஜியின் விவேகத்தைக் கண்டு ஜனங்களெல்லாம் ஆச்சரியம் அடைந்தார்கள். வர்த்தகன் பிள்ளைகளும், தங்கள் தகப்பனுடைய எண்ணம் நிறைவேறினதைப்பற்றி, அதிக மகிழ்ச்சி கொண்டார்கள்.

## 4. வண்ணானும் முதலையும்.

1. தஞ்சை ஜில்லாவில் ஒரு கிராமத்தின் ஓரமாகப் பெரிய ஆறு ஒன்று ஓடுகிறது. அந்த நதி அதிக ஆழமுள்ளது. வெயிற்காலத்திலும் அதில் ஜலம் வற்றுவதில்லை. அதனால் அநேகம் முதலைகள் அங்கே வசித்திருக்கும்.

2. கிராமத்துவண்ணான் அந்த ஆற்றில் துணிகளை வெளுப்பது வழக்கம். ஒருநாள் துணிகளை



வெளுத்து ஆற்றங்கரையில் உலர்த்தி, ஜலத்தில் ஒரு கல்லின்மேற் சும்மா உட்கார்ந்திருந்தான்.

3. இருக்கும்போது வேடிக்கையாக "முதலை! முதலை! ஐயோ, என்னை ஒரு முதலை பிடித்துக் கொண்டது" என்று கத்தினான். கூச்சலைக்கேட்ட கிராமத்து ஜனங்கள் தங்கள் வேலையை விட்டு விட்டு, கையில் தடியை எடுத்துக்கொண்டு ஓடி

வந்தார்கள். அப்போது வண்ணன் கைகொட்டிச் சிரித்தான். வந்தவர்கள் கோபம் அடைந்து திரும்பிப் போய்விட்டார்கள்.

4. அந்த வண்ணன் மறுநாள் ஜலத்திலிருந்து துணிகளை வெளுக்கும்போது, உண்மையாகவே ஒரு முதலை வந்து அவன் காலைக் கௌவிக் கொண்டது. வண்ணன் முன்போலவே, "முதலை! முதலை! ஐயோ, நிஜமாகவே இன்றைக்கு முதலை வந்து என் காலைக் கௌவி இழுக்கிறது" என்று உரக்கக் கத்தினன். முன்போலவே வேடிக்கை செய்கிருன் என்றெண்ணி, உதவி செய்ய ஒருவரும் வரவில்லை.

5. முதலை அவனை ஆழத்தில் இழுத்துக் கொண்டு போய் விழுங்கிவிட்டது.

விளையாட்டாகவும் பொய் சொல்லாதே.

# 5. கில்லி ஆட்டம்.

இராசப்பன். "அடே, குருசாமி! இன்று ராஜா பிறந்தநாள். பள்ளிக்கூடம் இல்லையென்று உபாத்தியாயர் சொன்னர். நாம் ஏதாவது ஒரு விளையாட்டு விளையாடலாம். வருகிருயா?"

குருசாமி. "அப்படியே, வருகிறேன். என்ன விளையாடலாம்?"

இராசப்பன். "நன்ருக ஓடுகிற விளையாட்டாக இருக்கவேண்டும். சும்மா உட்கார்ந்திருப்பது என்ருல் எனக்குச் சரிப்படாது."



குருசாமி. "ஆமாம், எனக்கும் அப்படித்தான். பள்ளிக்கூடத்துக்கு எதிரில் உள்ள மைதானத்துக்குப் போகலாம் மற்றப் பிள்ளைகளும் அங்கே இருப்பார்கள். கில்லி ஆட்டம் ஆடலாம்."

இராசப்பன். "சரி, போகும்போது எங்கள் வீட்டு வழியாகத்தானே போகவேண்டும். வீட்டில் கில்லியும் தாண்டுகோலும் வைத்திருக்கிறேன். எடுத்துக்கொண்டு போகலாம்."

குருசாமி. "சரிதான், இரண்டு கட்சிகளுக்கும் யார் யாரைத் தலைவராக வைத்துக்கொள்ளலாம்."

இராசப்பன். "நீ நன்றாக விளையாடுகிறவன். நீ ஒரு கட்சித் தலைவனாக இரு. சேஷன் மற்றொரு கட்சித் தலைவனாக இருக்கட்டும். அவன் வேகமாக ஓடுவான். அதோ வருகிறான்."

குருசாமி. "அடே! சேஷா, நாங்கள் கில்லி யாட்டம் ஆடப்போகிறோம். நீ ஒரு கட்சித் தலைவனாக இருக்கவேண்டும். இந்த ஆட்டத்தில் அனுசரிக்கும் விதிகள் என்ன? எனக்குத் தெரியும்படி சொல்லிவிட்டால், சண்டை வராமல் இருக்கும்."

சேஷன். "அவைகள் உனக்குத் தெரியாவா? ஒன்றும் கஷ்டம் இல்லை. கில்லியைத் தட்டிக் கிளப்பினபிறகு இரண்டுதரம்தான் கில்லியை அடிக்கப் போகலாம். கில்லி ஒருதரம் கீழே பட்டுக் கிளப்பினால், பிடிக்கக்கூடாது. கில்லியை அடிப்பதில் தாண்டுகோல் தரையிற் படக்கூடாது. இந்த மூன்று விதிகளைத்தான் முக்கியமாக அனுசரிக்கவேண்டும்."

எல்லாப் பிள்ளைகளும் சரிதான் என்று ஒப்புக்கொண்டு "நேரமாகிறது. சீக்கிரம் கட்சி பிரித்துக்கொண்டு விளையாடலாம்" என்று சொன்னார்கள்.

## 6. ஜீவகாருண்யம்.

எவ்வுயிரும் என்னுயிர்போல்
  எண்ணி இரங்கவும் உன்
தெய்வ அருட்கருணை
  செய்யாய் பராபரமே.

கொல்லா விரதம்
  குவலயமெல் லாமோங்க
எல்லார்க்கும் சொல்லுவதென்
  னிச்சை பராபரமே.

கொல்லா விரதமொன்று
  கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ
  அறியேன் பராபரமே.

# 7. திருட்டுக்கை நில்லாது.

I. பாகம்.

1. கன்னட தேசத்தில் ஒரு கிராமத்தில் முருகன் கோவிந்தன் என்று இரண்டு சிறுவர்கள் இருந்தார்கள். அவர்கள் ஒரே பள்ளிக்கூடத்திற் படிப்பவர்கள்; மிகவும் சிநேகமாக இருப்பவர்கள்.

2 ஒருநாள் சாயங்காலம் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்குப் போகும்போது, வழியோரமாக இருந்த ஒரு தோட்டத்துக்குப் போனார்கள். அங்கே ஒரு மாமரத்தில் நல்ல மாம்பழங்கள் குலை குலையாகத் தொங்கியிருந்தன.

3. அந்த மரத்தண்டை போனபோது, கோவிந்தன் சற்று நின்று பழங்களை உற்றுப்பார்த்தான். முருகன் "நாழிகை ஆகிறதே. ஏன் நிற்கிறாய்? போகலாமே" என்றான்.

4. கோவிந்தன். "முருகா! நிமிர்ந்து பார்! இந்த மாப்பழங்கள் என்ன நேர்த்தியாக இருக்கின்றன! இவைகளைப் பார்த்தால் எனக்கு நாக்கில் ஜலம் ஊறுகிறது. இங்கிருந்து காலை எடுத்து வைக்க எனக்கு மனம் வரவில்லை. உனக்கு ஒன்



றும் எனக்கு ஒன்றுமாக இரண்டு பழங்களைப் பறித்து எடுத்துக்கொள்ளலாம்."

5. முருகன். "என்ன பேச்சுப் பேசுகிறாய்? கோவிந்தா! அந்த மரம் நம்முடையதா? நமக்குச் சொந்தம் இல்லாததை எடுப்பது சரியன்று என்பது உனக்குத் தெரியாதா?"

6. கோவிந்தன். "சீ சீ! இந்த மரத்தில் எத்தனையோ பழங்கள் இருக்கின்றன. இரண்டொரு பழம் எடுத்துக்கொண்டால், தோட்டக்காரனுக்கு என்ன நஷ்டம்?"

7. முருகன். "நிஜம்தான், அதிக நஷ்டம் ஒன்றுமில்லை, நமக்குச் சொந்தம் அல்லாததை எடுப்பது திருட்டு ஆகாதா?"

8. கோவிந்தன். "நான் திருடனா? நான் என்ன ஒருவருடைய பணத்தையா எடுக்கிறேன்? ஒரு மாமரத்திலிருந்து இரண்டொரு பழம் பறித்துக் கொண்டால், அந்தமட்டில் நான் திருடன் ஆய்விடுவேனா?"

9. முருகன். "இப்படி பேசாதே. தவிடானாலும் சரி, தனமானாலும் சரி, தனக்குச் சொந்தம் அல்லாததை எடுப்பவன் திருடனே."

10. கோவிந்தன். "நீ சொல்லுகிறது மிகவும் வேடிக்கையாக இருக்கிறதே. தவிடும் தனமும் சரியாகுமா?"

11. முருகன். "சரியல்ல, ஆனாலும் சொந்தக்காரர் உத்தரவு இல்லாமல், தவிட்டை எடுப்பதும் திருட்டுத்தான், தனத்தை எடுப்பதும் திருட்டுத்தான். மேலும் 'தவிட்டுக்கு வந்த கைதான் தனத்துக்கும் வரும்' இதைப்பற்றி எத்தனைமுறை நம்முடைய ஆசிரியர் சொல்லியிருக்கிறார்? உனக்குத் தெரியாதா? இனி மாம்பழத்தைத் திரும்பிப் பாராமல் வீட்டுக்குப் போகலாம், வா."

12. அப்பால் இருவரும் வேறு வார்த்தைகள் பேசிக்கொண்டே வீட்டுக்குப் போய்விட்டார்கள்.



# 8. திருட்டுக்கை நில்லாது.

## II. பாகம்.

1. போன பாடத்தில் மாப்பழம் திருடவேண்டாம் என்று கோவிந்தனுக்கு முருகன் புத்தி சொன்னதாகப் படித்திருக்கிறீர்கள். வீட்டுக்குப் போனபிறகு அன்று இரவு முழுவதும் கோவிந்தனுக்கு மாம்பழமே நினைவாக இருந்தது. அந்த நினைவு மனத்தைவிட்டுப் போகவே இல்லை. தூங்கும்போதுகூட அவன் மாப்பழத்தைப் பற்றியே கனவு கண்டான்.

2. மறுநாள் சாயங்காலம், பள்ளிக்கூடம் விட்டதும், முருகன் போகிறவரையில், கோவிந்தன் ஒளிந்துக்கொண்டு இருந்தான். அப்பால் அவன் தனியாகத் தோட்டத்துக்குப் போனான். அங்கே ஒருவரும் இல்லை. கிராமத்தில் திருடர் இல்லையென்றுதோட்டக்காரன் தோட்டத்துக்குக்காவல் வைக்கவில்லை. கோவிந்தன் தனக்கு இஷ்டமான இரண்டு பழம் பறித்து, ஒரு வேலி மறைவில் உட்கார்ந்துகொண்டு இரண்டு பழத்தையும் சாப்பிட்டான். தான் செய்கிற காரியம் தப்பு என்பது அவனுக்குத் தெரியும். ஆனாலும் ஒருவரும் அவனைப் பார்க்கவும் இல்லை: அவனுக்கு ஒரு கெடுதியும் நேரிடவும் இல்லை.

3. அதுமுதல் கோவிந்தன் அடிக்கடி அங்கே போய் மாம்பழம் திருடித்தின்று வந்தான். திருடுவதில் முதலில் இருந்த பயமும் வெட்கமும் கொஞ்சங் கொஞ்சமாகப் போய்விட்டன. அப்பால் வேறு சிறு பொருள்களைத் திருட ஆரம்

பித்தான். பேனா, மைக்கூடு, பந்து முதலானவைகளைத் திருடிவந்தான். நாளாக நாளாகப் பயமே இல்லாமற் பணமும் திருடத் தொடங்கினான்.

4. ஒருநாள் ஒரு தனவான் ஸ்நானம் செய்வதற்காக ஆற்றுக்குப் போனார். அங்கேபோய்ச் சேர்ந்ததும் அவர் தம்முடைய மடிவேஷ்டி, சம்புடம் முதலியவைகளை ஆற்றங்கரையில் இருந்த ஒரு மரத்தடியில் வைத்தார். அன்று பள்ளிக்கூடம் இல்லாமையால், கோவிந்தன் அடுத்த வயலில் உலாவிக்கொண்டிருந்தான். இருக்கும்போது, தனவான் வேஷ்டி முதலியவைகளை மரத்தடியில் வைப்பதைப் பார்த்தான். அவர் ஸ்நானம் பண்ணுகிற சமயம் பார்த்து ஓசைப்படாமல் மரத்தண்டைப் போனான். யாரும் பார்க்கவில்லை என்று நினைத்து, சம்புடத்தை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு ஓடிப்போய்விட்டான். 'இன்று இலை அறுத்தவன் நாளைக்குக் குலை அறுப்பான்,' என்பதுபோல, மாம்பழம் திருட ஆரம்பித்தவன் இவ்விதமாகப் பணம் திருடலானான்.

5. தனவானுடன் வந்த வேலைக்காரன் இவற்றையெல்லாம் மறைவில் நின்று பார்த்திருந்தான். அவன் உடனே துரத்திக்கொண்டு போய், கோவிந்தனைப் பிடித்து எஜமான் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனான். அந்தத் தனவான் கோவிந்தனை நியாயாதிபதியிடம் ஒப்புவிக்கவே அவர் விசாரணை செய்து அவனுக்குப் பன்னிரண்டு பிரம்படி அடிக்கும்படி உத்தரவு செய்தார்.

6. வீட்டுக்குப் போகும்போது, கோவிந்தன் வழியில் முருகனைப் பார்த்தான். பார்த்ததும் தேம்



பித் தேம்பி அழுது, "ஐயோ, முருகா! நீ அன்று தோட்டத்திற் சொன்ன புத்திமதியைக் கேளாமல் மாம்பழம் திருட ஆரம்பித்துக் காலணு அரையணு முதலானவைகளைத் திருடலானேன். இவ்விதம் கொஞ்சங் கொஞ்சமாகத் திருட்டுத்தனத்தில் தேர்ந்து, கடைசியில் சம்புடம் திருடி அகப்பட்டுக்கொண்டேன். இப்பொழுது தண்டனை யடைந்து அவமானப்பட்டு வந்தேன். உன் முகத்தைப் பார்க்கவும் வெட்கமாக இருக்கிறது" என்று சொன்னன்.



# 9. நம்முடைய வேலைக்காரர்கள்.

1. ஒரு பள்ளிக்கூடத்தில் இரண்டு சிறுவர்கள் படித்துவந்தார்கள். அவர்களில் ஒருவன் பெயர் செல்லப்பன், மற்றவன் பெயர் முத்தப்பன். செல்லப்பன் ஒரு தனவானுடைய பிள்ளை; அவன் ஒரு பெரிய வீட்டில் இருந்தான், முத்தப்பன் ஓர் ஏழையின் பிள்ளை. அவன் வசித்தது ஒரு சிறு குடிசையில். அவனுக்குத்தாயும் இல்லை; சகோதரியும் இல்லை. ஆகையால் தானே சோறு சமைத்துத் தகப்பனுக்குப் போட்டுத் தானும் உண்பான்.

2. ஒருநாள் பள்ளிக்கூடம் விட்டதும், இரண்டு சிறுவர்களும் வீட்டுக்குப்போனார்கள். போகும்போது செல்லப்பன் முத்தப்பனைப் பார்த்து "எங்களுக்கு நேர்த்தியான வீடு இருக்கிறது. இட்டவேலையைச் செய்ய எனக்குமட்டும் மூன்று வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். என்னுடைய நிலைமை உனக்கு இருந்தால் நீயும் சௌக்கியமாக இருக்கலாமே" என்று சொன்னான். அதற்கு முத்தப்பன், "அதெல்லாம் ஒன்றும் இல்லை. உனக்கு மூன்றுபேர்கள் இருந்தால், எனக்குப் பத்துப் பேர்கள் இருக்கிறார்கள்" என்று சொன்னான்.

3. செல்லப்பன், "என்ன! உனக்குப் பத்து வேலைக்காரர்களா! இதென்ன, இப்படிப்பட்ட பொய் பேசுகிறாயே! உன்னை மெய்யன் என்றல்லவோ நினைத்திருக்கிறேன். உனக்கு ஒருவன்கூட

இல்லை என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம் ஆயிற்றே" என்றான்.

4. அவர்கள் அங்கே பேசிக்கொண்டிருந்ததை உபாத்தியாயர் சமீபத்தில் இருந்து கேட்டுக் கொண்டு இருந்தார். முத்தப்பன் நல்ல குண சாலி என்பதும் அவன் பொய் பேசமாட்டான் என்பதும் அவருக்குத் தெரியும். அவர் அந்த இரண்டுபேர்களையும் கூப்பிட்டு, "முத்தப்பா! நீ சொன்னது எனக்குத் தெரியவில்லை. உன் தகப்ப னுக்கு ஏதாவது புதையல் கிடைத்ததா? யாரா வது பணம் கொடுத்தார்களா? அவர் செல்லப் பன் தகப்பனாரைப் பார்க்கிலும் தனவானா? அப் படி யில்லாவிட்டால், நீங்கள் பத்து வேலைக்கா ரர்களை வைத்துக்கொள்ள முடியுமா? வீண் பெரு மை பேசுகிறாயோ?" என்று கேட்டார்.

5. முத்தப்பன் சிரித்துவிட்டு "இல்லை ஐயா, நான் உண்மைதான் பேசுகிறேன். என்னிடம் பத்துப்பேர்கள் உண்டு. அவர்கள் என் உத்தர வின்படி நடப்பவர்கள். செல்லப்பனுடைய வே லைக்காரர்கள் ஒவ்வொரு சமயம் அடங்கி நடக்க மாட்டார்கள்; அல்லது எங்கேயாவது போய் விடுவார்கள்; அல்லது அவன் வேலையைச் சரி யாகச் செய்யமாட்டார்கள், என் வேலைக்காரர்க ளோ அப்படி இல்லை. வேலை செய்ய எப்பொழு தும் சித்தமாக இருப்பார்கள். சொன்னபடி செய் யாத ஆள் ஒருவனும் என்னிடம் இல்லை" என்று சொன்னான்.

6. அதன்மேல் உபாத்தியாயர், "பேச்சுக்குப் பேச்சு சிங்காரமாக இருக்கிறது. உன் ஆட்களு டைய பெயரைச் சொல்லு என்றார். செல்லப்ப



னும், "ஆமாம், அவர்கள் பெயரைச் சொல்லு" என்று கேட்டான்.

7. முத்தப்பன், "என் கால்கள் இருவர். என் கைகள் இருவர். என் காதுகள் இருவர். என் கண்கள் இருவர். என் மூக்கும் வாயும் சேர்ந்து சரியாகப் பத்துப்பேர்கள்" என்ருன்.

8. முத்தப்பன் மறுபடியும் பின் வருமாறு சொன்ஞன்: "நான் எங்கேயாவது போக விரும்பி

னல், 'என்னை அங்கே கொண்டுபோங்கள்' என்று என் கால்களுக்குச் சொல்லுகிறேன். உடனே அவைகள் அப்படியே செய்கின்றன. எனக்கு ஏதாவது ஒரு பொருள் வேண்டுமானல், 'அதை எடுத்துக்கொடுங்கள்' என்று கைகளுக்கு உத்தரவு செய்கிறேன். உடனே எனக்கு வேண்டிய பொருளை அவை தாவி எடுத்துக் கொடுக்கின்றன. நான் பசியாக இருந்தால் என் கைகள் ஆகாரத்தை எடுத்து வாயில் போடுகின்றன. என் வாய் உண்கின்றது. எதையாவது நான் பார்க்க விரும்பினல் அதை என் கண்கள் எனக்கு உடனே காட்டுகின்றன. ஒரு பொருளின் வாசனையை அறிய விரும்பினல் என் மூக்கு அதை மோந்து பார்க்கின்றது. எதையாவது நான் கேட்க விரும்பினல் உடனே என் காதுகள் கேட்கின்றன.

9. "இந்தப் பத்துப்பேர்களும் எந்தவேளையிலும் நான் சொன்னபடி கேட்கிறார்கள். ஒரு வேலையைச் செய்ய அவர்களிடம் இரண்டுதரம் சொல்லவேண்டிய அவசியம் இல்லை. எப்பொழுதும் அவர்களைத் தூக்கத்திலிருந்து எழுப்பி, 'இதைச் செய்யுங்கள்,' 'அதைச் செய்யுங்கள்' என்று சொல்லவேண்டிய அவசியமும் இல்லை. செல்லப்பனுடைய ஆட்கள் செய்கிற வேலைகளையெல்லாம் என்னுடைய ஆட்களும் செய்கிறார்கள். என்னுடைய ஆட்களுக்குச்சம்பளம் இல்லை."

10. உபாத்தியாயர் இதைக் கேட்டு, அவனுடைய விவேகத்துக்காக அவனை மெச்சி, "நன்றாகச் சொன்னாய். இந்த ஆட்களை நம்பியிருக்கிறவரையில், உனக்கு ஒரு குறைவும் இராது: க்ஷேமமாகவே இருப்பாய்" என்று சொன்னார்.



# 10. இராமரும் அணிலும்.

1. வெகுகாலத்துக்கு முன்னே அயோத்திமா நகரை தசரதர் என்னும் சக்கரவர்த்தி ஆண்டுவந்தார். அவருக்கு நான்கு குமாரர்கள் உண்டு. அவர்களுள் மூத்தவர் இராமர். இராமருடைய மனைவியின் பெயர் சீதை. இராமர் சர்வோத்தமர். பிதாவின் வார்த்தையைக் காப்பாற்றுவதற்காக அவர் சில வருஷகாலம் காட்டில் வாசம் செய்தார். அப்போது சீதையும், இராமருடைய தம்பி இலட்சுமணரும் உடன் இருந்தார்கள்.

2. இருக்கும்போது, ஒருநாள் பொன் நிறமுள்ள மான் ஒன்று அவர்களுக்கு எதிரில் ஓடிற்று. அதைப் பிடித்துக் கொடுக்கும்படி சீதை இராமரைக் கேட்டாள். அதற்காக இராமர் அதன் பின்னுலே போனார். போனவர் வெகுநேரம் வரையில் வரவில்லை. ஆதலால் அவரைப் போய்ப் பார்த்து வரும்படி இலட்சுமணரை அனுப்பி விட்டு சீதை தனியாக இருந்தாள்.

3. இராவணன் என்கிற ராட்சசன் ஒருவன் இலங்கையை ஆண்டுவந்தான். அவன் மிகுந்த துஷ்டன். அவனுடைய ஏவுதலின்பேரில்தான், அவன் மாமன் மாரீசன் என்பவன், இராமர் முதலியவர்களுக்கு முன்பு மான் வடிவமாகத் தோன்றினன். சீதை தனியாக இருந்த சமயம் பார்த்து இராவணன் அங்கே வந்து அவளை லங்கைக்கு எடுத்துக் கொண்டுபோய்ச் சிறையில் வைத்து விட்டான்.

4. இராமர் திரும்பிவந்து பார்த்தபோது முன்பு இருந்த இடத்தில் சீதையைக் காணாமல், அதிக வருத்தம் அடைந்து, சீதையைத் தேடி வரும்படி மிருகங்களையும் பறவைகளையும் அழைத்தார். அழைத்தபோது எல்லாவற்றிற்கும் முன்னே அணில் வந்தது.



5. அக்காலத்தில் அணிற்பிள்ளையின் மேல் தோல் பொன் நிறமான மயிரால் மூடப்பட்டு மிகவும் பிரகாசமாக இருந்தது. எக்காலத்திலும் அது சந்தோஷமாக விளையாடிக்கொண்டிருக்கும். அது தத்தித்தாவி ஓடி வந்து, இராமருடைய வில்லின்மேல் குதித்தேறி உட்கார்ந்து கொண்டு, "ஐயா, மகாராஜா! இதோ வந்தேன். சீதையைக் கண்டுபிடிக்கப் போகலாம், புறப்படுங்கள்" என்றது.

6. அழகிய அணிற்பிள்ளை இப்படி தைரியமாக வந்து தனக்கு உதவி செய்வதாகச் சொன்ன

தைக் கேட்டு, இராமர் அதை எடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு, முதுகைத் தடவிக்கொடுத்து, "நீ, மிகவும் நுட்பமான ஒரு சிறு பிராணி. பிறரோடு சண்டைபோட உன்னால் ஆகுமா? நீ மரங்களில் உள்ள பழங்களைத் தின்றுகொண்டு சுகமாகவும் சந்தோஷமாகவும் விளையாடிக்கொண்டிரு" என்று சொன்னார்.

7. இப்படி சொல்லிக்கொண்டே அணிலைத் தமது விரல்களால் தடவிக்கொடுத்து ஆசீர்வதித்து அனுப்பினார். விரல்களை அவர் எடுத்ததும், அதன் முதுகில் அவர் தடவிக்கொடுத்த இடங்கள் மூன்று கோடுகளாக மாறிவிட்டன. அவைகளை இப்பொழுதும் பார்க்கலாம்.

## 11. இரண்டு லோபிகள்.

1. ஆசியா கண்டத்தின் மேற்கிலே, துருக்கர்கள் வசிக்கிற தேசத்தில், கிர்பா என்று ஒரு பட்டணம் உண்டு. அங்கே காபர் என்ற லோபி ஒருவன் இருந்தான். லோபிக்குரிய யுக்திகளை எல்லாம் அவன் நன்றாக அறிந்தவன்: அதனால் அவன் லோபித்தனத்தில் நல்ல பேர்பெற்றான். காபருடைய பிரக்கியாதியைக் கேள்வியுற்று, பஸ்ஸோராவில் இருந்த ஹாமெட் என்னும் வேறொரு லோபி அவனுடைய வித்தையைக் கொஞ்சம் கற்றுக்கொள்ள விருப்பி, அவனைத் தேடிக்கொண்டு வந்தான்.



2. கிர்பாவில் காபருடைய வீட்டை விசாரித்தறிந்து, உள்ளே போய், ஹாமெட் என்பவன், "ஐயா, நான் வெகு தூரத்தில் இருப்பவன். லோபித்தனத்தில் தங்களுக்குள்ள சாமர்த்தியத்தைக் கேள்வியுற்று, உங்கள் வித்தையைக் கொஞ்சம் கற்றுக்கொள்ளலாம் என்று உங்களிடம் வந்தேன். என்னை உங்கள் சிஷ்யனாக வைத்துக் கொள்ள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான்.

3. உடனே காபர், "வாரும். அப்படியே செய்யலாம். இன்றைச் சாப்பாட்டுக்கு ஏதாவது வாங்கிவரவேண்டும். கடைக்குப் போவோம். என் காரியங்களை அங்கே நேரில் பார்த்து லோபித்தனத்தின் விசேஷத்தை அறிந்துகொள்ளும்' என்று சொன்னான்.

4. லோபிகள் இருவரும் புறப்பட்டு முதலில் ரொட்டிக்கடைக்குப் போனார்கள். குருவாகிய லோபி கடைக்காரனைப் பார்த்து, "உன்னிடத்தில் நல்ல ரொட்டி இருக்கிறதா" என்று கேட்டான். கடைக்காரன், "முதல் தரமான ரொட்டி இருக்கிறது. வெண்ணெய்போல வெளுப்பாகவும் மிருதுவாகவும் இருக்கும்" என்றான். குரு சிஷ்யனைப் பார்த்து, "கேட்டீரோ? இவன் ரொட்டி வெண்ணெய்போல இருக்கிறதாம். ஆகையால் ரொட்டியைப் பார்க்கிலும் வெண்ணெய் விசேஷம் இல்லையா? ரொட்டிக்குப் பதிலாக வெண்ணெய் வாங்கிக்கொள்ளலாமே" என்று சொன்னான்.

5. அதன்மேல் குருவும் சிஷ்யனும் வெண்ணெய்க் கடைக்குப் போனார்கள். குரு கடைக்காரனைப் பார்த்து, "உன்னிடம் நல்ல வெண்ணெய் இருக்கிறதா?" என்று கேட்டான். கடைக்காரன், "என் வெண்ணெய் எண்ணெயைப்போலவே தெளிவாக இருக்கிறது" என்று சொன்னான். குரு சிஷ்யனிடத்தில், "இவன் வெண்ணெய் எண்ணெயைப்போல நன்றாக இருக்கிறது என்கிறான். ஆதலால், வெண்ணெய்போலவே எண்ணெயும் உதவும் அல்லவா? நாம் எண்ணெயையே வாங்கிக்கொண்டு போகலாம்" என்று சொன்னான்

6. அவர்கள் இருவரும் பிறகு எண்ணெய்க் கடைக்குப் போனார்கள். கடைக்காரனை "நல்ல எண்ணெய் இருக்கிறதா?" என்று கேட்க, அவன் "முதல்தரமான எண்ணெய். அந்தபட்டும் இங்கே தேடிவந்தது உங்கள் நல்ல காலம். என் எண்ணெய் தண்ணீரைப்போல வெளுப்பாகவும் தெளிவாகவும் இருக்கிறது; இதோ பாருங்கள்" என்று காட்டினான். குரு சிஷ்யனிடத்தில், "பார்த்தீரா? தண்ணீரும் எண்ணெயைப்போல நல்லதுதான் என்பதற்கு என்ன சந்தேகம். நாம் திரும்பி வீட்டுக்குப் போகலாம். கடவுள் கிருபையால் வீட்டில் ஒரு பாத்திரம் நிறைய சுத்தமான ஜலம் வைத்திருக்கிறேன்" என்று சொல்லி, சிஷ்யனை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனான்.

7. வீட்டுக்குப் போனதும், குரு சிஷ்யனுக்கு ஒரு பாத்திரத்தில் ஜலம் எடுத்துக்கொடுத்து "திருப்தியாகச் சாப்பிடுங்கள்" என்று சொன்னான். தானும் கொஞ்சம் சாப்பிட்டான். பிறகு குரு, "நண்பரே! இன்றளவில் எதாவது கற்றுக் கொண்டீரா?" என்று கேட்டான். சிஷ்யன், "ஆ, ஆ, கற்றுக்கொண்டேன். வந்தகாரியம் வீணாகப் போகவில்லை. நீங்கள் அதிக விவேகமுள்ளவர்கள். விஷயங்களை எவ்வளவு நுட்பமாக விளக்கிவிடுகிறீர்கள்! கடவுள் உங்களை ரட்சிக்கவேண்டும். நான் விடை பெற்றுக்கொள்ளுகிறேன்." என்று சொல்லித் தன் ஊருக்குப் போய்விட்டான்



# 12. பனைமரப் பாட்டு.

## I. பாகம்.

பனைமரமே! பனைமரமே!
ஏன் வளர்ந்தாய்? பனைமரமே!
நான்வளர்ந்த காரியத்தை
நாட்டாரே! சொல்லுகிறேன்.
பராமுகம் செய்யாமல்
பட்சமுடன் கேட்டிருங்கள்.
படுக்கப்பாய் நானாவேன்
பாய்முடையத் தோப்பாவேன்.
வெட்டநல்ல விறகாவேன்
வீடுகட்ட வாரையாவேன்.
கட்டநல்ல கயிறாவேன்
கன்றுகட்டத் தும்பாவேன்.
வாரவட்டை நானாவேன்
வரிச்சுகளும் நானாவேன்.
புனைந்தசுவைச் சால்களுக்குப்
புரிமணையும் தானாவேன்.
நனைந்துவரு வார்களுக்கு
நல்லகுடை நானாவேன்.
பசித்துவரு வார்களுக்குப்
பழங்கள்பல நான் தருவேன்.
வெயில்மிகுந்த கோடையிலே
விளங்குநல்ல நுங்காவேன்.
காளையர்க்கும் கன்னியர்க்கும்
கைவிசிறி தானாவேன்.

# 13. இளமைப் பழக்கம் எப்போதும் இருக்கும்.

1. ஒரு காட்டின் நடுவில் மரப்பொந்து ஒன்றில் ஒரு கிளி இரண்டு குஞ்சுகளைப் பொரித்து வளர்த்து வந்தது. தாய்க்கிளி ஒருநாள் இரை தேட வெளியே போயிருந்தது.

2. அந்த வேளையில் ஒரு வேடன் அந்த மரத்தின் அடியில் ஒரு வலையை விரித்து மறைந்திருந்தான். கிளிக்குஞ்சுகள் பொந்திலிருந்து வெளிக் கிளம்பி மெல்ல மெல்லக் கீழே இறங்கி வருகையில், கால் நழுவி வலையில் விழுந்தன. உடனே வேடன் அவைகளைப் பிடித்து ஒரு கூடையிற் போட்டு மூடி எடுத்துக்கொண்டு போனான்.

3. காற்றின் போக்கு வரவுக்காக, கிளிக்கூடைகளில், பல துவாரங்கள் இருக்கும். வேடனுடைய கூடையில் ஒரு துவாரம் கொஞ்சம் பெரிதாக இருந்தது. அதன் வழியாக ஒரு கிளிக் குஞ்சு, வெளிப்பட்டு, சத்தம் பண்ணாமல், சமீபத்தில் இருந்த ஒரு ரிஷியின் பர்ணசாலைக்குப் பறந்துபோயிற்று. உயிர்தப்பிப் பிழைப்பதற்காகப் பறந்து ஓடிவந்த அந்தக் குஞ்சுக்கு ரிஷி குமாரர்கள் ஆகாரம் கொடுத்து அதைக் காப்பாற்றி வந்தார்கள். அவ்விடத்திலேயே அது வளர்ந்து வந்தது.

4. வேடன் மற்றொரு குஞ்சைமட்டும் பத்திரமாக எடுத்துக்கொண்டு போய் அடுத்த பட்ட



ணத்தில் இருந்த ஒரு கசாப்புக் கடைக்காரனுக்கு விற்றுவிட்டான். அவன் அதை ஒரு கூட்டில் விட்டுச் சிலநேரம் வீட்டிலும் சிலநேரம் கடையிலும் கட்டிவைத்து வளர்த்துவந்தான்.

5. கூட்டின் கம்பி ஒன்று ஒருநாள் தளர்ந்து ஆடிக்கொண்டு இருந்தது. அதை எப்படியோ தந்திரமாக விலக்கிக்கொண்டு வெளிப்பட்டு, அந்தக் கிளியானது காட்டுக்குப் போய், தன் இஷ்டப்படி அங்குமிங்கும் பறந்து சென்று இனிய பழங்களைத் தின்றுகொண்டு இருந்தது.

6. ஸ்தல யாத்திரை செய்துவரும் பிராமணன் ஒருவன், அந்தக் காட்டின் வழியாகப் போகும்போது, சற்று இளைப்பாறுவதற்காக, கிளி இருந்த மரத்தின் நிழலில் உட்கார்ந்தான். உடனே அந்தக் கிளி, "இவன் யாரோ வந்திருக்கிறான். வெட்டு, குத்து. ஆட்டுக்கறி ஆறு காசு;

கோழிக்கறி நாலு காசு. மூஞ்சிமேலே அடிப் பேன். போ போ உன் மூட்டையை எடு" என்று கூவிற்று.

7. பிராமணன், "இதென்ன, இந்தக் கிளி கெட்ட வார்த்தைகளைப் பேசுகின்றது. இங்கே இருப்பது யோக்கியம் அன்று" என்று எழுந்து, கொஞ்சதூரம் போய் ஒரு குளக்கரையில் இருந்த மரத்து நிழலில் உட்கார்ந்தான். ரிஷி ஆச்சிரமத் தில் வளர்ந்த கிளி, அந்த மரத்தில் இருந்தது. அது, "சுவாமீ! க்ஷேமமா? எங்கே எழுந்தருள் கிறீர்? இளைப்பாற்றிக்கொள்ளும். இதோ கனிகள் இருக்கின்றன. இவைகளைப் புசித்துப் பசியை ஆற்றிக்கொள்ளும். தங்கள் தரிசனத்தால் அடி யேன் கிருதார்த்தன் ஆனேன்" என்று பேசிற்று.

8. பிராமணன் ஆச்சரியமடைந்து, "ஓ, கிளி யே! அரைநாழிகைக்கு முன்னே ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்தேன். அங்கிருந்த கிளி கெட்ட வார்த்தைகள் சொல்லிற்று. அங்கே இருக்க மனமில்லாமல் இங்கே வந்தேன். நீ இனிமை யாகப் பேசி உபசரிக்கிறாய். இது என்ன அதி சயம்?" என்று கேட்டான்.

9. அதற்கு அந்தக் கிளி, "அதிசயம் ஒன்றும் இல்லை. நாங்கள், இருவரும் ஒரு தாய் வயிற்றி லேதான் பிறந்தோம். ஒரு வேடன் கையில் அகப்பட்டோம். நான் அவனிடத்திலிருந்து தப்பி முனிவர் இடத்தை அடைந்தேன். அந்தக் கிளி ஒரு கசாப்புக்காரனுக்கு விற்கப்பட்டது. நான் முனிவர் பேசும் வார்த்தைகளைப் பேசுகி றேன். அது கசாப்புக் கடைக்காரன் பேசுகிற

பேச்சைப் பேசுகிறது. இளமையில் எங்களுக்கு ஏற்பட்ட பழக்கமே எங்கள் குணம் வித்தியாசமாக இருப்பதற்குக் காரணம்" என்று சொல்லிற்று



# 14. குல்லா விற்பவனும் குரங்குகளும்.



1. யார் என்ன செய்கிறார்களோ அதைப் பார்த்து அப்படியே செய்வது குரங்குகளின் தன்மை.

2. ஆற்காட்டில் குல்லா வியாபாரி ஒருவன் ஒரு தையற்காரனைக் கொண்டு ஐம்பது குல்லாக்கள் தைத்து அவற்றை மூட்டையாகக் கட்டி எடுத்துக்கொண்டு அடுத்த கிராமங்களில் விற்கப் போனான். போகிற வழியில் ஒரு காடு இருந்தது.

3. காட்டில் வெயில் அதிக உக்கிரமாக இருந்ததனால் அந்த வர்த்தகன் மூட்டையைக் கீழே வைத்துவிட்டு, வெயிலுக்காக ஒரு குல்லாவைத் தன் தலையில் வைத்துக்கொண்டு, சற்று இளைப்பாறுவதற்காக ஒரு மரத்தடியிற் படுத்துக்கொண்டான். படுத்ததும் தூங்கிவிட்டான்.

4. கொஞ்ச நேரம் பொறுத்து விழித்து எழுந்தான். பக்கத்தில் இருந்த மூட்டையில் ஒரு குல்லாகூட இல்லை. சுற்றி எங்கும் பார்த்தான். குல்லாக்கள் போன போக்கு ஒன்றும் விளங்கவில்லை. மேலே நிமிர்ந்து பார்த்தான். சுற்றி



யிருந்த மரங்களின்மேல் அநேகம் குரங்குகள் உட்கார்ந்திருந்தன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு குல்லாவைப் போட்டுக்கொண்டிருந்தது படுத்துக்கொள்வதற்குமுன் வர்த்தகன் ஒரு குல்லாவை எடுத்துப் போட்டுக்கொண்டதை அவைகள் பார்த்திருந்ததனுல், அவன் தூங்கின சமயம் பார்த்துக் கீழேவந்து, அவைகளும் குல்லாவை எடுத்துப் போட்டுக்கொண்டன.

5. குரங்குகளைப் பிடிக்கலாம் என்று பார்த்தான். ஆனுல் அது முடியவில்லை. அதிக வெப்

பமாக இருந்ததனால், அவன் தான் போட்டிருந்த குல்லாவைக் கழற்றிக் கீழே போட்டு, "திருட்டுக் குரங்குகளே! குல்லாவை யெல்லாம் எடுத்துக் கொண்டீர்களே. இதையும் எடுத்துக்கொள்ளுங் கள்" என்று சொன்னான்.

6. அவன் தன் குல்லாவைக் கழற்றிக் கீழே போட்டவுடனே, ஒவ்வொரு குரங்கும், அவன் செய்ததுபோலவே, அது அது போட்டிருந்த குல்லாவைக் கழற்றிக் கீழே போட்டுவிட்டது. வர்த்தகன் சந்தோஷமாகக் குல்லாக்களை யெல் லாம் பொறுக்கி எடுத்துக்கொண்டு போய்விட் டான்.



# 15. கருத்துள்ள பிள்ளை.



1 ஒரு பட்டணத்தில் ஏழைப்பிள்ளை ஒருவன் இருந்தான். அவன் ஒரு பள்ளிக்கூடத்திற் சேர் ந்து சிலகாலம் கஷ்டப்பட்டு வாசித்துக்கொண் டிருந்தான். படிப்பை நிறுத்தின பிறகு ஒரு வேலைக்காக அநேக இடங்களில் அலைந்து கொண்டிருந்தான். அப்போது ஒரு பெரிய கடை யில் ஒரு குமாஸ்தா வேலை இருக்கிறதென்று கேள் விப்பட்டான்.

2. உடனே அவன் நல்ல வஸ்திரம் உடுத்திக் கொண்டு, கடைக்குப் போய் கடைக்காரனுக்கு வந்தனம் செய்து குமாஸ்தா வேலையைத் தனக் குக் கொடும்படி வேண்டினான். வியாபாரி அவ னைப் பார்த்து, "இதற்கு முன்னே நீ எங்கேயா



வது வேலை பார்த்தது உண்டா?" என்று கேட்டான். அதற்கு அந்தப் பிள்ளை, "இல்லை ஐயா, இத்தனை நாள் பள்ளிக்கூடத்தில் வாசித்துவந்தேன்" என்று சொன்னான். வியாபாரி அதைக் கேட்டு, "அப்படியானால் உனக்கு என்னிடத்தில் வேலை கிடைக்காது; வேலை செய்து வழக்கப்பட்டவன் எனக்கு வேண்டும்" என்று சொல்லி விட்டான்.

3. அதைக் கேட்ட சிறுவன் முன்போலவே மரியாதையாக வர்த்தகனுக்கு வந்தனம் செய்து ஒன்றும் பேசாமல் திரும்பிப்போனான். போகும்

போது வெளித் தாழ்வாரத்தில் கீழே விழுந்து கிடந்த ஓர் ஆணியை எடுத்து ஜாக்கிரதையாக மடியில் வைத்துக்கொண்டான். அவனுக்கு உண்டாகப்போகிற நன்மைக்கு அதுதான் காரணமாயிற்று.

4 அந்தச் சிறிய ஆணியை அந்தப் பிள்ளை எடுத்து மடியில் வைத்துக்கொள்வதை வியாபாரி கதவின் வழியாகப் பார்த்துக்கொண்டு இருந்தான். அவன் 'சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்' என்னும் உண்மையை மேற்கொண்டு சிறிய பொருள்களையும் அலட்சியம் பண்ணுமல் பத்திரமாகப் பார்ப்பவன். ஆகையால், அவன்: "இந்தப் பிள்ளை மிகுந்த கருத்து உள்ளவன். ஒரு சிறிய ஆணியையே எடுத்துப் பத்திரப்படுத்துகிறவன், தன்னிடம் கொடுக்கும் எந்தப் பொருளையும் பத்திரமாகப் பார்த்துக்கொள்வான்; ஒன்றையும் வீணுக்கமாட்டான். மேலும் அதிக அடக்கம் உள்ளவனுகவும் மரியாதை தெரிந்தவனுகவும் இருக்கிருன். சொன்ன எந்த வேலையையும், சரியாகச் செய்வான் என்று தோன்றுகிறது. குமாஸ்தா வேலைக்கு இவன் தகுந்தவனே" என்று எண்ணினுன்

5. அதன்மேல் அந்தப் பிள்ளையைக் கூப்பிட்டு குமாஸ்தா வேலையை அவனுக்குக் கொடுத்தான். சிறுவனும் மிகவும் ஒழுங்காகவும் ஜாக்கிரதையாகவும் வேலை பார்த்து வந்தான். கொஞ்சகாலத்தில் நல்ல கெட்டிக்காரன் என்று பேர் வாங்கி, அப்பால் வியாபாரியினுடைய ஒரு பாகஸ்தனும் ஆனுன்.

# 16 பனைமரப் பாட்டு.

II. பாகம்.

எழுதுகின்ற பிள்ளைகளுக்
கெழுத்தாணிக் கூடாவேன்.

படிக்கின்ற பிள்ளைகட்குப்
பகர்கின்ற தடுக்காவேன்.

அரிச்சுவடி என்னாலே,
வருக்கபாடம என்னாலே.

எண்சுவடி என்னாலே,
குழிமாற்றும் என்னாலே.

கணக்கர்களும் மற்றவரும்
கணக்கறிவ தென்னாலே.

வர்த்தகரும் மற்றவரும்
வழியறிவ தென்னாலே.

பலசரக்கு மண்டிகளில்
பத்திரமாய் நானிருப்பே...

கார்த்திகை மாதத்தில்
கருத்தறிந்த பிள்ளைகட்கு,

திருத்தமுள்ள வாணமதாய்த்
தெருவெங்கும் சுற்றிடுவேன்.

அரண்மனையில் நானிருப்பேன்
ஆஸ்தான முன்னதே.

மச்சுள்ளே நானிருப்பேன்
மாளிகையில் நானிருப்பேன்.

குச்சுள்ளே நானிருப்பேன்
　　குடிசைக்குள் நானிருப்பேன்.
வரி கனைமேலே
　　எந்நாளும் வீற்றிருப்பேன்.

# 17. வீண்பெருமை உள்ள காக்கை.

1. மதுரை ஜில்லாவில் உள்ள ஒரு கிராமத்தில் தனவான் ஒருவன் இருந்தான். அவனுக்கு நேர்த்தியான ஒரு வீடும் வீட்டைச் சுற்றி ஒரு தோட்டமும் உண்டு. அவன் ஒரு மயிலை வாங்கி அருமையாக வளர்த்து வந்தான். அது தன் இஷ்டப்படி அந்தத் தோட்டத்தில் மேய்ந்து திரியும். வீட்டு மெத்தையின்மேற் பறந்து சென்று, அங்கும் இங்கும் உலாவும்.

2. அது தன் தோகையை விரிக்கும்போது சூரிய கிரணம் பட்டால், தோகையில் உள்ள கண்கள் பொன்போலவே பிரகாசிக்கும். கிராமத்தில் உள்ளவர்கள் தெருவில் இருந்து அதைப் பார்த்து, "ஆ! ஆ! இது என்ன அழகான பட்சி!" என்று அதிசயிப்பார்கள்.

3. ஒன்றும் தெரியாத ஒரு காக்கை, ஒரு மரத்தில் உட்கார்ந்து, மயிலைப் பார்த்துக்கொண்டும், ஜனங்கள் பேசிக்கொள்வதைக் கேட்டுக்கொண்டும் இருந்தது. "இதென்ன? எல்லாரும் மயிலைப் பார்த்து ஆச்சரியப்படுகிறார்கள். என்னைப்



பார்த்துமட்டும் ஒருவரும் ஆச்சரியம் அடையவும் இல்லை; புகழவும் இல்லையே" என்று நினைத்துக் கொண்டது.

4. இதைப்பற்றி அரைநாழிகை யோசித்து, "காரணம் இப்பொழுதுதான் எனக்குத் தெரிகிறது. மயிலுக்கு இவ்வளவு நேர்த்தியான இறகுகள் இருப்பதுதான் இதற்குக் காரணம். இந்த மாதிரியான இறகுகள் எனக்கு இருந்தால், ஜனங்கள் என்னையும் புகழ்வார்கள்" என்று அது நினைக்கலாயிற்று.

5. மறுநாள் அந்தக் காக்கை எங்கும் சுற்றிப் பார்த்தது. அந்தத் தனவானுடைய வீட்டில் ஓர் அறையில் ஒரு மயில் விசிறி இருந்தது. அதை எடுத்துத் துண்டு துண்டாகப் பிரித்து, "வரி விழுந்த புலியைப் பார்த்து நரியும் கொள்ளிக்கட்

டையாற் சுட்டுக்கொண்டதுபோல்". காக்கையானது அவற்றைத் தன் தோகையில் சொருகிக் கொண்டது.

6. "இப்பொழுது நானும் ஒரு மயிலாகி விட்டேன்" என்று நினைத்து, அந்த மயிலினிடம் போய், "அண்ணு" என்று அழைத்தது. மயில் கோபங்கொண்டு, அதன்மேல் விழுந்து கொல்லப்போயிற்று. அதைப் பார்த்து மற்றக் காக்கைகளும் அதன்மேல் விழுந்து கொத்தின.

7. கடைசியாக அந்தக் காக்கை குற்றுயிரோடு காட்டுக்குத் தப்பியோடி அங்கே தனியாகக் காலம் கழித்துக்கொண்டு இருந்தது.

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினற் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

# 18. கிளியும் அரசனும்.

1. முன் ஒரு காலத்தில் ஒருவன் ஒரு கிளியை வளர்த்துவந்தான். அவன் அந்தக் கிளிக்கு "அதற்குச் சந்தேகமே இல்லை" என்ற வார்த்தைகளைமட்டும் சொல்லிக் கொடுத்திருந்தான். அந்தக்கிளியை என்ன கேள்வி கேட்டாலும், அது ஒரு பக்கமாகத் தலையைச் சாய்த்துக்கொண்டு, ஆலோசனை செய்வது போல மேலே பார்த்து, "அதற்குச் சந்தேகமே இல்லை" என்று பதில் சொல்லும்.



2. சொந்தக்காரன் அதை விற்க விருப்பி ஒரு நாள் அதைக் கடைத்தெருவுக்கு எடுத்துக் கொண்டு போனான். கேட்பவர்களுக்கெல்லாம் அதன் விலை நூறு ரூபாய் என்று சொன்னான். பார்த்த ஒவ்வொருவரும், "ஒரு கிளி நூறு ரூபாயா? எங்களுக்கு வேண்டாம்" என்று அதை வாங்கவில்லை.

3. கடைசியாக ஓர் அரசன் அங்கே வந்தான். "இந்தக் கிளியினிடத்தில் என்ன அதிசயம் இருக்கிறது? ஏன் இவ்வளவு விலை சொல்லுகிறாய்? இது நூறு ரூபாய் பெறுமா?" என்று கேட்டான். சொந்தக்காரன், "என்னைக் கேட்கவேண்டாம். கிளியையே கேளுங்கள்" என்று சொன்னான்.

4. அதன்மேல் அரசன், "ஓ, கிளயே! உன் எஜமானன் உன் விலை நூறு ரூபாய் என்று சொல்

லுகிறானே. உனக்கு அவ்வளவு கொடுக்கலாமா?" என்று கேட்டான். கிளி உடனே, "அதற்குச் சந்தேகமே இல்லை" என்றது. அதைக் கேட்டு, அரசன், சந்தோஷம் அடைந்து, நூறு ரூபாய் கொடுத்துக் கிளியை வாங்கிக்கொண்டு போனான்.

5. மறுநாள் அரசன் கிளியினிடம் கொஞ்சலாம் என்று போனான். எதைக் கேட்டாலும், "அதற்குச் சந்தேகமே இல்லை, அதற்குச் சந்தேகமே இல்லை" என்பதையே அது திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு இருந்தது. கடைசியில் அரசன் சலிப்படைந்து, "உன்னை நூறு ரூபாய் கொடுத்து வாங்கினேனே! என்னைப்போன்ற மூடன் உண்டா?" என்று கிளியைப் பார்த்துக் கேட்டான். "அதற்குச் சந்தேகமே இல்லை" என்று கிளி சொல்லிற்று. அப்போதுதான் கிளி சொன்னது உண்மையென்று அரசனுக்குத் தெரிந்தது.



# 19 நரியும் வெள்ளாடும்.

1. வெயிற்காலத்தில் ஒருநாள் ஒரு வெள்ளாடானது தழை தின்பதற்காக ஒரு காட்டில் திரிந்துகொண்டு இருந்தது. அப்போது, அங்கே ஒரு நரி இரைதேடிக் கொண்டு வந்தது. அந்த இரண்டு மிருகங்களுக்கும் தாகம் அதிகமாக இருந்தமையால் எங்கேயாவது ஜலம் கிடைக்குமா என்று சுற்றிப்பார்க்கையில், ஒரு குட்டையின் அடியில் ஜலம் தெளிவாக இருப்பதாகத் தெரிந்தது.



2. முன்பின் பாராமல் நரியும் வெள்ளாடும் அந்தக் குட்டையில் குதித்து ஜலம் குடித்துத் தாகம் தீர்த்துக்கொண்டன. பிறகு மேலே ஏறுவதற்குத் தெரியாமல் சங்கடப்பட்டுக்கொண்டிருந்தன. எப்படி ஏறலாமென்று பலவிதமாக யோசித்தும் சரியான யோசனை ஒன்றும் தோன்றவில்லை.

3. கடைசியாக நரியானது, இப்பொழுதுதான் எனக்கு யோசனை தோன்றுகிறது. நீ நிமிர்ந்து இந்தப் பள்ளத்தின் பக்கச் சுவரிலே முன்னங்காலை வைத்து நில். நான், உன் தலைமேல் ஏறி, அங்கிருந்து வெளியே குதித்து வந்து விடுகிறேன். நான் மேலே போய்ச் சேர்ந்துவிட்

டால், உன் கொம்பைப் பிடித்து உன்னை மேலே சுலபமாக இழுத்துவிடுகிறேன்" என்றது.

4. கபடம் அறியாத வெள்ளாட்டுக்கு, தன்னை வெளியில் இழுக்கத்தக்க பலம் நரிக்கு இல்லை என்பது தோன்றவில்லை. அதனால், நரி சொன்ன படியே செய்தது. நரி, தான் சொன்னபடி ஆட்டின் முதுகில் ஏறித் தலையின்மேற் காலை வைத்து, பத்திரமாக மேலே குதித்துவிட்டது.

5. வெள்ளாடு, "சரி, நீ மேலே போய்ச் சேர்ந்துவிட்டாயே. இனி, நீ முன் சொன்னபடி எனக்கு உதவிசெய்" என்று கேட்டது. அதற்கு நரி, "உனக்கு வயதாகிவிட்டது. தாடிமாத்திரம் பெரியதுதான் புத்தி போதாது. உனக்கு உதவி செய்தால், என் பிராணன் போய்விடும். நான் அப்படிச் செய்வேனா? ஒரு புத்தி சொல்லுகிறேன் கேள். இந்தப் பள்ளத்திலிருந்து ஒருவேளை நீ தப்பிவந்தால், அந்தப் புத்தி உனக்கு உபயோக மாகும். திரும்பவும் வெளிவர உபாயம் தெரியா மல் பள்ளத்தில் குதிக்காதே" என்றது.

6. இவற்றையெல்லாம் ஒரு மரக்கிளையிலிருந்து பார்த்த ஒரு காக்கை "இந்த நரி மகா தந்திரம் உள்ளது: தன் காரியத்தை மாத்திரம் பார்த்துக்கொண்டது. இந்த ஆட்டுக்குப் புத்தியில்லை. ஆனாலும் மிகவும் நல்ல மிருகம். இதைப்போல உபகாரம் செய்வதே நல்லது" என்று நினைத்துக் கொண்டது.

ஆழமறியாமற் காலையிடாதே.

# 20. ராஜாவை வாழ்த்தல்.

சக்கரவர்த்தியை எங்கள் தலைவரை எந்நாளும்
சாமி நீர் காத்தருள்வீர்.

அக்கரையோடு நமக்கு
அளவில்லா நன்மை செய்தே
ஆண்டு மிகக் கருணை
பூண்டு விளங்கு மிந்தச்.— சக்கர.

எத்தனையோ வேந்தர் பலர்
இருந்தரசாண்டார் பண்டு
இவர் போலவே அதிர்ஷ்டம்
எவருக் கிருந்த துண்டு.— சக்கர.

கர்த்தரே வெகு பரி
சுத்தரே அளவில்லாக்
கருணைக் கடலே இந்தத்
தரணியை ஆண்டிடும்.— சக்கர.

# 21. ருத்திராட்சப் பூனை.

1. ஒரு பூனை கிழத்தனம் அடைந்துவிட்டது. அதனால் அதற்கு எலியைப் பிடிக்கச் சக்தி இல்லாமற் போயிற்று. அதற்காக ஓர் உபாயம் செய்தது. ஒரு வீட்டின் உக்கிராண அறைக்குப் போய்க் கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்தது. சுண்டெலிகள் முதலிற் பயப்பட்டுத் தூரத்தில் இருந்தன. பிறகு தைரியம் அடைந்து கொஞ்

சங் கொஞ்சமாகக் கிட்டே வரவும், முதுகின் மேற் குதித்து ஓடவும் ஆரம்பித்தன. பூனை ஒன் றுக்கும் அசையாமற் சும்மா இருந்தது.

2. இப்படி இருக்கையில் ஒருநாள், ஒரு சுண் டெலி, பூனையைப் பார்த்து, "ஐயா, முன்னே எல்லாம் நீ எங்களைப் பிடித்துக் கொன்று தின்



பாயே. இப்பொழுது எங்களை விளையாடவிட்டு வேடிக்கை பார்த்துக்கொண்டு இருக்கிறாயே! இது என்ன புதுமை?" என்று கேட்டது.

3. கிழப்பூனை கொஞ்சம் கண்ணைத் திறந்து, "மெய்தான், நான் முன்னமே பல சுண்டெலி களைப் பிடித்துக் கொன்று தின்று வந்தேன். அத னால் மிகுந்த பாவத்தைக் கட்டிக்கொண்டேன்.

இப்பொழுது எனக்கு வயதாகிவிட்டது. இனி மேலாவது இந்தப் பாவத்தை ஒழித்துக் கொஞ்சம் புண்ணியம் தேடிக்கொள்ளலாம் என்றெண்ணி, எலிகளைக் கொல்வதில்லை என்று பிரதிக்ஞைபண்ணிக்கொண்டேன். சந்நியாசம்வாங்கிக்கொண்டு நாளைக் காலையில் காசி யாத்திரை போகலாம் என்று எண்ணியிருக்கிறேன். காசிக்குப் போனால் நற்கதி பெறலாம். கங்காஸ்நானம் பண்ணினால் பாவம் தீரும். சாகிற காலத்தில் சங்கரா என்று ஈசுவரத்தியானம் செய்வது எவ்வளவு நன்மை?" என்று சொல்லிற்று.

4. இதைக் கேட்டு எலிகளெல்லாம் எதிரில் வந்து, "ஐயா, ருத்திராட்சப் பூனையே! இங்கே வீணாக் காலம் போக்கும் எங்களையும் அழைத்துக்கொண்டு போம். இங்கே ஜீவனம் பண்ணுகிறது கஷ்டமாக இருக்கிறது. தீர்த்த யாத்திரைக்காக வருகிற ஜனங்கள் காசியில் அநேகர் உண்டு என்கிறார்கள். அங்கே எங்களுக்கு விசேஷ தானியம் கிடைக்கும் புண்ணியமும் கிடைக்கும்" என்று வேண்டிக்கொண்டன.

5. 'வருகிற காலத்தில் எல்லாம் வலியவரும்' என்று சந்தோஷமடைந்து பூனையானது: "நல்லது, உங்களையும் அழைத்துக்கொண்டு போகிறேன்" என்று சம்மதித்தது. மறுநாட் காலையில் எல்லாம் பூனையுடன் புறப்பட்டன. பூனையானது, கழுத்தில் ருத்திராட்ச மாலை தரித்து, தண்ட கமண்டலங்களைக் கையில் வைத்துக்கொண்டு புறப்பட்டது. இரவில் எல்லாம் ஒரு பெரிய மைதானத்தில் தங்கி இருந்தன. பூனைக்கு இருட்டில் நன்றாய்க் கண் தெரியும். ஆகையால், நன்

ருக இருட்டினபிறகு இரண்டு மூன்று சுண்டெலி களைக் கொன்று தின்றது.

6. அவைகள் எல்லாம் இவ்விதமாக ஒரு வாரம் வரையில் யாத்திரை போய்க்கொண்டு இருந்தன. எலிகளின் தொகை நாளுக்கு நாள் குறைந்து வருவதை ஒரு கிழ எலி கவனித்து வந்தது. இருட்டில், கொல்லப்படும் எலிகளின் கூக்குரலும் கேட்டுவந்தது. ஒருவாரம் ஆனபிறகு, கிழ எலி, மற்ற எலிகளைப் பார்த்து, "நாம் காசிக் குப் போவது எது? இந்தப் பூனைக்குக் கழுத்தில் இருப்பது ருத்திராட்சம், கையில் இருப்பது கொடிய நகம். நம்மை ஏமாற்றி இது வயிறு வளர்த்துக்கொண்டு இருக்கிறது. இனி நாம் உடனே தப்பிப் பிழைக்கவேண்டும்." என்று எச் சரிக்கை செய்தது. இதைக் கேட்ட அளவில் மற்ற எலிகள் காட்டில் உள்ள வளைகளில் ஓடி ஒளித்தன.

மாற்றானை உறவென்று நம்பவேண்டாம்.

## 22. அரசனும் மாட்டுக்காரப் பையனும்.

1. பங்காளத்தில் முன் ஒரு காலத்தில் ஓர் அரசன் இருந்தான். அவன் நல்ல நீதிமான். "வெளியே போய் அடிக்கடி பார்க்கவேண்டும். நம்முடைய உத்தியோகஸ்தர்கள் அக்கிரமஞ்செய் யாமல் இருக்கிறார்களா, ஜனங்கள் கஷ்டப்படா

மல் க்ஷேமமாக இருக்கிறார்களா என்று அறிய வேண்டும்" என்கிற எண்ணம் உடையவன். ஆகையால், அவன் அடிக்கடி மாறுவேஷம் போட்டுக்கொண்டு, நகர் சோதனை செய்யப் போவான். அப்போது அவனைப் பார்த்தால் அரசன் என்று யாரும் தெரிந்துகொள்ள முடியாது. அப்படி அவன் வெளியே போகும்போதெல்லாம் எல்லாரும் வழக்கமாகப் போய்வரும் அரண்மனையின் வெளிவாசல் வழியாகப் போகாமல், அரண்மனையின் பின்புறமுள்ள ஒரு நுழை வழியாகப் போவான்.

2. ஒருநாள் இவ்விதமாக அரசன் போகும்போது, ஒரு மாட்டுக்காரப் பையன் அரண்மனைக்கு ஒரு பசுமாட்டை ஓட்டிக்கொண்டு வந்தான். அது, தலையீற்றுப் பசுவாகையால், அந்தப் பையனுக்கு அடங்கவில்லை. பையன் முன்னே இழுக்க, மாடு பின்னே இழுத்தது. அதன்மேல் அந்தப் பையன், மாறுவேஷம் போட்டுக்கொண்டு வந்த அரசனை யாரோ ஆளென்று எண்ணி, அவனைப் பார்த்து, "ஐயா, இந்தப் பசு எனக்கு அடங்கவில்லை. இதை இழுத்துக் கொண்டுபோக என்னால் முடியவில்லை. என் எஜமான் அரசனுக்கு இந்தப் பசுவை நேற்று நூறு ரூபாய்க்கு விற்றுவிட்டார். அரண்மனைக்கு இதைக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும். கொஞ்சம் கூட வந்து உதவி செய்கிறாயா?" என்று கேட்டான்.

3. அரசன்: "உனக்கு உதவி செய்தால் எனக்கு என்ன கொடுப்பாய்?" என்று கேட்டான்.

4. பையன்: "அரண்மனையில் என்ன கிடைக்கிறதோ அதிற் பாதி கொடுக்கிறேன்" என்று சொன்னான்.



5. அரசன்: "அரண்மனையில் பணம் கிடைக்குமென்று உனக்கு எப்படித் தெரியும்?"

6. பையன்: "அரண்மனையில் உள்ளவர்கள் மிகவும் நல்லவர்கள்: ஏழைகளிடம் இரக்கம் உள்ளவர்கள். ஏதாவது ஒரு சுமை எடுத்துக் கொண்டு போனால் அதற்குத் தக்கபடி வெகுமானம் கொடுக்கிறார்கள்."

7. அரசன்: 'நல்லது, உதவி செய்கிறேன். என் பங்கை மாத்திரம் எனக்குச் சரியாகக் கொடுத்துவிடு" என்றான்.

8 பையனும் அரசனுமாகப் பசுவை ஓட்டிக் கொண்டு போனார்கள். அரண்மனையின் சமீபத்திற் போகும்போது, அரசன் சில மரங்களுக்குப் பின்னால் மறைந்துவிட்டான். வந்த வழியாக அரண்மனைக்குட் பிரவேசித்து மாறுவேஷத்தை நீக்கி, ஒரு சேவகனை அழைத்து ஐந்து ரூபாய்

கொடுத்து, "நேற்று நான் வாங்கின பசு வந்தால், அதை ஓட்டிக்கொண்டு வருகிற ஆளுக்கு இதை இனமாகக் கொடு" என்று சொல்லி, சேவகன் தலை மறைந்ததும், மாறுவேஷத்தோடு போய் மாட்டுக்காரப் பையன் வரும் வழியில் நின்று கொண்டு இருந்தான்.

9. பையன் அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, "ஐயா, எனக்கு 8 அணு கொடுத்தார்கள். உனக்குச் சேரவேண்டிய இந்த 4 அணுவை வாங்கிக்கொள்" என்று கொடுத்தான்.

10. அரசன்: "எட்டணு தானு கொடுத்தார்கள்? அரண்மனையில் அவ்வளவு கொஞ்சமாகக் கொடுப்பார்களா? அதிகமாக ஒன்றும் கொடுக்கவில்லையா?" என்றான்.

11. பையன்: "இல்லை, ஐயா எட்டணுதான் கொடுத்தார்கள் அது போதாதா?" என்றான்.

12. அரசன். "அவர்கள் இன்னும் அதிகம் கொடுக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது என்னோடுகூட வா, உனக்கு இன்னும் வாங்கித் தருகிறேன்" என்றுசொல்லி அவனை அழைத்துக்கொண்டுபோனான்.

13 இரண்டுபேர்களும் அரண்மனை வாசலை அடைந்தார்கள். பையனுக்கு உள்ளே போகப் பயமாக இருந்தது. "ஐயா, யாராவது கோபித்துக்கொள்வார்கள். இந்த வழியாகப் போகாதே" என்றான். அரசன், "பயப்படாதே ராஜா என்னை அறிவார். ஒருவரும் கோபித்துக்கொள்ள மாட்டார்" என்று உள்ளே அழைத்துக்கொண்டு போனான்.

14. உள்ளே போனதும், அரசன்: ஒரு சேவகனைக் கூப்பிட்டு, மற்றவர்களை யெல்லாம் அழைக்கும்படி உத்தரவு செய்தான். அவர்கள் வந்ததும், பையனைப் பார்த்து, "உனக்கு எட்டணா கொடுத்தவனைக் காண்பி" என்றான். பையன், பேச வாய் திறவாமல் பயந்து நடுநடுங்கி, சட்டையையும் தலைப்பாவுமுள்ள ஒருவனைக் காட்டினான்.

15. அந்தச்சேவகன் அரசன் காலில் விழுந்து "மஹாராஜா, அடியேனை மன்னிக்க வேண்டும். நான் அவன் கையிற்கொடுத்தது எட்டணாதான். மற்றதை நான் எடுத்துக்கொண்டேன்" என்று சொன்னான். அதைக் கண்டு அரசன் கோபம் அடைந்து அவனை வேலையிலிருந்தும் நீக்கி விட்டு, பையனைப் பார்த்து "நீ யோக்கியன் உனக்குக் கொடுக்கும்படி கொடுத்தது 5 ரூபாய் உன் யோக்கியதைக்காக 5 ரூபாய் சேர்த்துக்கொடுக்கிறேன்" என்று 10 ரூபாய் கொடுத்தனுப்பினான்.

## 23. காகம் காகம் எங்கே போனாய்?

காக்கையே! நீ எங்கே போனாய்? சொல்லு.
களம் நாடி இரைதேடப் போனேன் ஐயா

களத்துக்குப் போயென்ன கொண்டுவந்தாய்?
கவ்வியே நான் வைக்கோல் கொண்டுவந்தேன்.

வாக்கினுல் நீ கொணர்ந்த அதை என் செய்தாய்?
மாடுதின்னும்படி யதனை மகிழ்ந்து போட்டேன்.

மாடந்த வைக்கோலை என்ன செய்தது?
வயிருர உட்கொண்டு சாணி யாக்கிற்று.

ஆக்கினுல் நீ அதனை என்ன செய்தாய்?
அதை வறட்டியாத் தட்டிக் குயவற்கீந்தேன்.

அக்குயவன் உனக்கென்னகொடுத்தான் சொல்லு?
அவனதற்குப் பதிலாகத் தோண்டி ஈந்தான்.

தூக்கியே நீ அதனுல் என்ன செய்தாய்?
கிணற்றில்நீர் மொண்டெடுத்துச் செடிக்கு விட்டேன்.

சுகமதனுல் காகமே என்ன! செப்பு.
தோட்டம் நல்ல காய்கனி தந்தது ஐயா.



# 24 மிருகங்கள் ராஜாவை ஏற்படுத்திக்கொள்ளுதல்.



1. ஒரு காட்டில் ஓர் ஆண் சிங்கம் மிருகங்களுக்கெல்லாம் ராஜாவாக இருந்தது சில வருஷகாலம் இருந்து பிறகு நோயால் வருந்தி அது செத்துப்போயிற்று. அபபோது மற்ற மிருகங்கள் எல்லாம் பெண் சிங்கத்தினிடம் வந்து உபசாரம் சொல்லி வேறொரு அரசனை ஏற்படுத்துவதற்காக ஒரு மரத்தின் கீழே கூட்டம் கூடின.



2. செத்துப்போன சிங்கத்துக்கு ஒரு குட்டி இருந்தது. அது மிகவும் சிறியது; ஆகையால், காட்டில் உள்ள எல்லா மிருகங்களையும் அரசாள அதற்குச் சக்தி போதாது. அதனால் வேறோர் அரசனை ஏற்படுத்துவது அவசியம் என்று எல்லா மிருகங்களும் முடிவு செய்தன.

3. அதன்மேல் சிறுத்தை முன்னே வந்து, "ஓ மிருகங்களே! சிங்கத்தை ஒத்தவர்கள் உங்களில் ஒருவரும் இல்லை. நான்தான் ஒருவாறு ஒத்திருக்கிறேன். ஆதலால் அரசனாக இருக்கத் தக்க யோக்கியதை எனக்குத்தான் உண்டு" என்று சொல்லிற்று.

4. அப்பால் கரடி எழுந்திருந்து, 'சபையோர்களே! சிறுத்தையைப்போலவே எனக்கும் பலம் இருக்கிறது, உக்கிரமும் இருக்கிறது. சிறுத்தை மரம் ஏருது. நான் ஏறுவேன். ஆகையால் நான் சிறுத்தையைப்பார்க்கிலும் விசேஷம் இல்லையா?" என்றது.

5. பிறகு குதிரை எல்லாரையும் பார்த்து, "என் அழகு உங்கள் யாருக்கும் இல்லை. என்னுடைய வேகமோ வாயுவேகம். சத்துருக்கள் எதிரில் வந்தால் கடிப்பேன், பின்னால் வந்தால் உதைப்பேன். நான் ஏன் அரசன் ஆகக்கூடாது?" என்றது.

6. மான், "அழகிலும் வேகத்திலும் குதிரை என்ன, என்னைப்பார்க்கிலும் சிறந்ததா?" என்றது.

7. நரி, "இந்த வேலைக்கு ராஜதந்திரம் வேண்டுமே. எனக்குத் தெரிந்த தந்திரம் உங்களில் யாருக்குத்தான் தெரியும்?" என்றது.

8. குரங்கு, "எனக்குச் சாமர்த்தியம் அதிகம். அல்லாமலும் எந்த மரத்திலும் ஏறுவேன். ஜீவவர்க்கத்தில் மனிதன் சிரேஷ்டம். உங்களில் ஒருவரும் மனிதனை ஒத்திருக்கவில்லை. ஏறக்குறைய மனிதனுக்குச் சமானம் நான்தானே" என்றது.

9. கிளி, "குரங்கு மனிதரை ஏறக்குறைய ஒத்திருப்பது மெய்தான். ஆனாலும் என்ன பிரயோ

ஜனம். நான் மனிதரைப்போலப் பேசுவேனே. குரங்கு பேசுமா?" என்றது.

10. குரங்கும் கிளியும் தங்களை மனிதரோடு ஒப்பிட்டுக் கொண்டதைக் கேட்டு மற்றவைகள் எல்லாம் நகைத்தன.

11. யானை மிகவும் பலமும் காத்திரமும் உள்ளதாயும் அதிக புத்திகூர்மை உள்ளதாயும் இருப்பதனுல், மிருகங்கள் எல்லாம் ஒரே மனமாய் யானையையே ராஜாவாக ஏற்படுத்திக்கொண்டன.

## 25. "நான் —"நாம்.

1. பொன்னன் முருகன் என்னும் இரண்டு சிநேகிதர்கள் ஒரு சாலை வழியே போய்க்கொண்டு இருந்தார்கள். போகும்போது வழியின் பக்கத்தில் கால்வாயோரமாக விழுந்து கிடந்த ஒரு பணமுடிப்பை அவர்கள் கண்டார்கள்.

2. அதை எடுக்கலாமென்று அவர்கள் ஓடினூர்கள். வேகமாக ஓடி முடிப்பை முதலில், பொன்னன் எடுத்தான். எடுத்து "இன்றைக்கு ஏதோ நல்ல காலம். இதுவரையில் ஒரு தம்படிகூட நான் கண்டெடுத்த தில்லை. கடவுள் கிருபையால் இப்பொழுது நான் தனவான் ஆகிவிட்டேன்" என்று சொன்னுன்.

3. முருகன் அது கேட்டு: "பொன்னு" 'நான்' என்று சொல்வது சரியா? 'நாம்' என்றல்லவா சொல்லவேண்டும்? நாம் இருவருமாக அதைப்



பார்க்கவில்லையா? ஆதலால் நாம் இருவரும் அதைப் பங்கிட்டுக்கொள்ளவேண்டும்" என்றான்.

4. பொன்னன்: "இல்லை, இல்லை. முதலில் நான்தான் அதை எடுத்தேன். ஆகையால் முடிப்பு என்னுடையதே. இதில் உனக்குப் பங்கு இல்லை" என்று சொன்னான். முருகன் ஒன்றும் சொல்லவில்லை. இருவரும் பிறகு வழி நடந்து போனார்கள்.

5. கொஞ்ச நேரத்தில் ஒருவன் குதிரைமேல் ஏறிக்கொண்டு அந்த வழியாக அவர்கள் பின்னால் வந்தான். அவன் காத்திரமாகவும் மிகவும்

பலசாலியாகவும் இருந்தான். அவன் கையில் ஒரு கத்தியை வைத்திருந்தான். பொன்னன் கையில் இருந்த முடிப்பைப் பார்த்ததும், அவன் பொன்னனைப் பிடித்துக்கொண்டு: "போலீசுக்கு வா, திருடா! நான் குதிரைக்கு ஜலம் காட்டுவ தற்காக அடுதத குளத்துக்குப் போனேன். போகும்போது வழியின் பக்கத்தில் வாய்க்காலோரமாக இந்த முடிப்பை வைத்தேன். வருவதற்குள் இதை எடுத்துக்கொண்டு வந்துவிட்டாயே" என்றான்.

6. பொன்னன் முருகனைப் பார்த்து, "வழியில் யாரும் இல்லாத இடத்தில் இருந்த முடிப்பை எடுத்து இந்தச் சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டோம். இப்பொழுது நாம் என்ன செய்யலாம்? கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும்" என்று சொன்னான்.

7. அதற்கு முருகன்: "பொன்னா; 'நாம்' என்று சொல்லாதே முடிப்பை நீயே எடுத்தாய். நான் எடுத்தேனா? நாம் இருவரும் பாகஸ்தர் இல்லையே" என்றான்.

பணம் பெரிதோ பழமை பெரிதோ.



# 26. நாயும் நிழலும்.

இங்கிலீஷ் நோட்டு—ஏகதாளம்

காபபா-காபபா-சசத-நிதத-சாநிசா,
சாகரீக சாரிசநிச-பஸ்ஸநிதநி-சாநிசா.

1. வற்றியுள்ள மாமிசத்துண்டை
வாயிற்கவ்வி நாயொன்று
சுற்றிப்பாலந் தன்மேலேறித்
துள்ளித்துள்ளிச் சென்றது.

2. ஆற்றுநீரில் தனதுநிழலை
அந்தநாய்கண் டோடியே
வேற்றுநாய்போ கின்றதென்று
வெறுகொண்டுவாய் திறந்தது

3. மாமிசந்தண் ணீரில்விழ
வாடிமுக மேங்கியே
ஆமிதற்கென் செய்வதென்று
ஆசையற்றுச் சென்றது.

4. உள்ளதுபோ தாதெனவே
ஊருடைமை நோக்கிடும்
கள்ளமாந்த ருளதொழிந்து
கண்கலக்க மடைவரே.



# 27. முத்துமாலை.

1. வெகு காலத்துக்கு முன்னே பங்காளத்தில் அப்துல்லா என்றொரு வர்த்தகனிருந்தான். அவன் நல்லவன், உண்மைபேசுகின்றவன்; அதனால் எல்லாருக்கும் அவனிடத்தில் மதிப்பும் பிரியமும் உண்டு. அவனைப் புகழ்ந்து பேசாதவர்கள் இல்லை. அவன் இருந்த கிராமத்தில் அவனே பெரியமனிதன்.

2. அவனுக்கு, காஸிம் என்ற ஒரே குமாரன் உண்டு. அவன் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தான். அவன் உண்மை பேசுவதே இல்லை. ஒரு மரத்தில் ஆறு பழங்களைப் பார்த்தால், இருபது பழங்களைப் பார்த்தேன் என்பான். தகப்பனுடைய கடையில் சாமான் வாங்க இருபதுபேர் வந்தால், ஐம்பதுபேர்கள் வந்தார்கள் என்பான். தகப்பன் அவனுக்கு இனமாக நாலணா கொடுத்தால், அவர் தனக்கு நாலு ரூபாய் கொடுத்ததாகச் சொல்லிக்கொள்வான். மற்ற விஷயங்களிலெல்லாம் அவன் நல்லவன்தான். பாடங்களைச் செவ்வையாகப் படிப்பான். வகுப்பில் எப்போதும் முதலில் இருப்பான்.

3. பொய்பேசும் வழக்கம் மகனிடத்தில் அதிகரித்துவருவதைக் கண்ட தகப்பனுக்கு அதிக வருத்தம் உண்டாயிற்று. அதைத் தவிர அவனுக்கு வேறே ஒரு கவலையும் இல்லை. அக்காலத்தில் பங்காளத்தில் பக்கிரி இருந்தார். அவர் அதிக மகிமை பொருந்தியவர்; அநேக அற்புதங்களைச் செய்யக் கூடியவர். ஒருநாள் அவர்



அப்துல்லா வீட்டுக்கு வந்தார். அப்துல்லா அவருக்கு அதிக உபசாரப்பண்ணி விருந்து செய்வித்தான். அவரோடு பேசிக்கொண்டிருக்கையில், அப்துல்லா, தன் மகனிடத்தில் பொய் பேசும் வழக்கம் அதிகரித்து வருவதைச் சொல்லித் துக்கப்பட்டான். அதுகண்டு பக்கிரியானவர் "பயப்படவேண்டாம். ஆண்டவனுடைய கிருபையால் உங்கள் மகனிடம் இருக்கிற அந்தக் கெட்ட குணத்தை நான் மாற்றிவிடுகிறேன். அவனிடம் நான் தனியாக ஒரு விஷயம் பேசவேண்டும். அவனைக்கூப்பிடுங்கள்" என்று சொன்னார்.

4. காஸிம் வந்ததும் அவனைப் பக்கிரி வெளியில் அழைத்துக் கொண்டுபோய் அவன் கழுத்தில் ஒரு முத்துமாலையைப்போட்டார். அவர்கள் நின்றுகொண்டிருப்பதைப் படத்திலே பாருங்கள். முத்துமாலையைக் கழுத்திற் போட்டு "பையா, என்னைத்தவிர இதை ஒருவரும் உன் கழுத்திலிருந்து கழற்றமுடியாது. மூன்றுமாதம் ஆனவுடன் நான் வந்து கழற்றி எடுத்துக்கொள்ளுகிறேன். அதுவரையில் இது உன் கழுத்திலே இருக்கட்டும். அதனால் உனக்கு ஒரு கெடுதியும் உண்டாகாது. நன்மையே உண்டாகும்" என்று சொல்லி அவனை வாழ்த்திப் பிறகு தம் வழியே போய்விட்டார்.

5. அந்த முத்துமாலை அநேக மேதாவிகளிடம் கைமாறி வந்தது: அதிக மகிமை உள்ளது. அதற்கு "உண்மை மாலை" என்று பெயர். அதைத் தரித்திருப்பவன் உண்மைபேசுகிறவரையில் அது ஒரே அளவாக இருக்கும் பொய் பேசினால் நீண்டுவிடும்.

6. பக்கிரி போனவுடனே காஸிம் பள்ளிக்கூடத்துக்கு ஓடி, மற்றப் பிள்ளைகளுக்கு அதைக் காட்டினான். அவர்கள், "இது அதிக நேர்த்தியாக இருக்கிறதே எங்கே கிடைத்தது?" என்று கேட்டார்கள். அதற்கு, காஸிம், "என் தகப்பனார் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கி அதை எனக்குக் கொடுத்தார்" என்று சொன்னான். சொன்னதும், அந்த மாலை ஒரு முழம் நீண்டது. அதைப் பார்த்துப் பிள்ளைகள் அதிசயம் அடைந்தார்கள்: காஸிம் பயம் அடைந்து, "இல்லை இல்லை. நான் சொன்னது உண்மை



அன்று. ஒரு பெரியவர் இதை என் கழுத்திற் போட்டுவைத்தார்" என்று சொன்னன். சொன்ன உடனே மாலை பழையபடி குறுகிவிட்டது.

7. உடனே பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள், "அந்த மகான் அதை ஏன் உன் கழுத்திற் போட்டார்?" என்று கேட்டார்கள். 'நான் உண்மை பேசியதற்கு வெகுமானமாக அவர் இதை எனக்குக் கொடுத்தார்" என்று சொன்னன். சொல்லும் போதே, அந்த மாலை மறுபடியும் ஒரு முழம் நீண்டது. "இல்லை இல்லை. உண்மை பேசியதற்காக அவர் இதை இனமாகக் கொடுக்கவில்லை. 'இதை

மூன்று மாதம் போட்டுக்கொண்டிரு’ என்றுசொன்னார்” என்று காஸிம் சொன்ன அளவில், அது மறுபடியும் முன்போலக் குறுகிவிட்டது.

8. எல்லாவற்றையும் பார்த்த பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் அந்த மாலையின் மகிமையை அறிந்துகொண்டார்கள். காஸிமுக்குப்பயம்உண்டாயிற்று. அதைக் கழற்றி யெடுக்கப் பார்த்தான். அது கழுத்தைவிட்டு வரவில்லை. பொய் பேசினால் உடனே அது ஒரு முழம் நீளுவதனால், அவன் பேசுவது பொய் என்பது ஒவ்வொருவருக்கும் தெரிந்துவிட்டது. ஒரு மாத காலத்தில் அவனுடைய வழக்கம் கொஞ்சம் கொஞ்சமாகத் திருத்தம் அடைந்துவந்தது. இரண்டு மாதம் ஆவதற்குள் உண்மை பேசுகிற வழக்கம் அவனுக்கு ஏற்பட்டது.

9. மூன்று மாதம் ஆனதும் பக்கிரி வந்தார். அப்துல்லா, “ஐயா! என் குமாரனுடைய குணம் நன்ருக மாறிவிட்டது. இப்பொழுது அவன் உண்மை பேசிவருகிருன். தேவரீர் செய்த நன்மைக்கு நான் என்ன பிரதி உபகாரம் செய்யப் போகிறேன்” என்று சொல்லி வந்தனம் செய்தான். பக்கிரி, “ஐயா, எல்லாம் ஆண்டவன் செயல். இனி முத்துமாலையை நான் எடுத்துக்கொண்டு போகிறேன்” என்று சொல்லி அதைக் கழற்றி மடியில் வைத்துக்கொண்டு போய்விட்டார்.

10. இந்தக் கதையை வாசிக்கின்ற சிறுவர்கள் எப்போதும் உண்மையையே பேசிவரவேண்டும்.

பொய் மெய்யை வெல்லுமா?





# 28. சாமர்த்தியம் உள்ள காக்கை.

1. ஒருநாள் வெயில் மிகுதியாக இருந்தது. குடிக்க ஜலம் எங்கும் கிடைக்காமையால் ஒரு காக்கை தாகத்தால் தவித்துக்கொண்டு இருந்தது. இன்னது செய்வது என்று அதற்கு ஒன்றும் தோன்றவில்லை. எங்கேயாவது கொஞ்சம் ஜலம் கிடைக்குமா என்று பார்த்துக்கொண்டே வீடுவீடாகப் பறந்துபோயிற்று.

2. கடைசியாக ஒரு தோட்டத்தில் ஒரு ஜாடியும் அதன் உள்ளே கொஞ்சம் ஜலமும் இருப்பதைப் பார்த்து, காக்கை இறங்கி வந்தது. ஜாடியில் உள்ள ஜலத்தை எட்டிக் குடிக்க முடியவில்லை. ஜாடியைச் சாய்த்தால் ஜலம் வெளியில்

வரும்; அப்படியாவது குடிக்கலாம் என்று பார்த்தால், ஜாடியைச் சாய்க்க முடியவில்லை. ஜாடி மிகவும் கனமாக இருந்தது.

3. பிறகு காக்கை "ஜலம் அடியில் இருக்கிறது. நான் உள்ளே இறங்க முடியாது. ஜாடியின்மேல் நான் உட்கார்ந்து இருக்கிறேன். இந்த மட்டத்துக்கு ஜலம் மேலெழும்பினால்தான் நான் குடிக்கலாம். ஜலம் அப்படி மேலெழும்புவதற்கு என்ன செய்யலாம்" என்று யோசித்தது.

4. சமீபத்திற் கீழே சில கற்கள் விழுந்து கிடந்தன. காக்கை ஒரு கல்லைக் கொண்டுவந்து ஜாடியிற் போட்டது. மறுபடி வேறொரு கல்லை எடுத்து வந்து போட்டது. இவ்விதமாக அநேகம் கற்களை ஒவ்வொன்றாகப் போட்டுவந்தது.

5. கற்கள் ஒவ்வொன்றாக விழுந்தமாத்திரத்தில், ஜாடியின் அடியில் இருந்த ஜலம் கொஞ்சம் கொஞ்சமாக மேலே வந்தது. கடைசியாக ஜலம் ஜாடியின் வாய்வரையிற் கிளம்பி வந்துவிட்டது. போதுமானவரையில் ஜலம் குடித்துத் தாகத்தைத் தீர்த்துக்கொண்டு, காக்கை பறந்து போயிற்று.

6. இந்தக் காக்கையின் சாமர்த்தியம் மெச்சத் தகுந்ததே. முதலில் ஜலங் கிடைக்காதபொழுது, சும்மா இருந்துவிடாமல் மேலும் மேலும் முயற்சி செய்தது அல்லவா?

கடலைத் தூர்த்தும் காரியம் முடிக்கவேண்டும்.



# செய்யுள் பாடம்.

(உலகநீதி.)

1. ஓதாமல் ஒருநாளும்
இருக்க வேண்டாம்.
2. ஒருவரையும் பொல்லாங்கு
சொல்ல வேண்டாம்.
3. மாதாவை ஒருநாளும்
மறக்க வேண்டாம்.
4. வஞ்சனைகள் செய்வாரோ
டிணங்க வேண்டாம்.
5. போகாத இடந்தனிலே
போக வேண்டாம்.
6. போகவிட்டுப் புறஞ்சொல்லித்
திரிய வேண்டாம்.
7. நெஞ்சாரப் பொய்தன்னைச்
சொல்ல வேண்டாம்.
8. நஞ்சுடனே ஒருநாளும்
பழக வேண்டாம்.
9. நல்லிணக்கம் இல்லாரோ
டிணங்க வேண்டாம்.
10. அஞ்சாமல் தனிவழியே
போக வேண்டாம்.
11. அடுத்தவரை ஒருநாளும்
கெடுக்க வேண்டாம்.
12. மனம்போன போக்கெல்லாம்
போக வேண்டாம்.
13. மாற்றானை உறவென்று
நம்ப வேண்டாம்.
14. தனம்தேடி உண்ணாமல்
புதைக்க வேண்டாம்.
15. தருமத்தை ஒருநாளும்
மறக்க வேண்டாம்.

16. குற்றமொன்றும் பாராட்டித்
திரிய வேண்டாம்.
17. கொலைகளவு செய்வாரோ
டிணங்க வேண்டாம்.
18. கற்றவரை ஒருநாளும்
பழிக்க வேண்டாம்.
19. வார்த்தைசொல்வார் வாய்பார்த்துத்
திரிய வேண்டாம்.
20. மூத்தோர்சொல் வார்த்தைகளை
மறக்க வேண்டாம்.
21. முன்கோபக் காரரோ
டிணங்க வேண்டாம்.
22. எளியாரை எதிரிட்டுக்
கொள்ள வேண்டாம்.
23. சேராத இடந்தனிலே
சேர வேண்டாம்.
24. செய்தநன்றி ஒருநாளும்
மறக்க வேண்டாம்.
25. உற்றாரை உதாசினங்கள்
சொல்ல வேண்டாம்.
26. புறஞ்சொல்லித் திரிவாரோ
டிணங்க வேண்டாம்.
27. வாதாடி வழக்கழிவு
சொல்ல வேண்டாம்
28. தெய்வத்தை ஒருநாளும்
மறக்க வேண்டாம்.
29. இறந்தாலும் பொய்தன்னைச்
சொல்ல வேண்டாம்.
30. திறம்பேசிக் கலகமிட்டுத்
திரிய வேண்டாம்.



# ஆத்திசூடி.

1. அறஞ்செய விரும்பு.
2. ஆறுவது சினம்.
3. இயல்வது கரவேல்.
4. ஈவது விலக்கேல்.
5. ஊக்கமது கைவிடேல்.
6. எண்ணெழுத் திகழேல்.
7. ஏற்ப திகழ்ச்சி.
8. ஐய மிட்டுண்.
9. ஒதுவ தொழியேல்.
10. ஔவியம் பேசேல்.
11. கண்டொன்று சொல்லேல்.
12. ஙப்போல் வளை.
13. சனிநீ ராடு.
14. ஞயம்பட வுரை.
15. இணக்கமறிந் திணங்கு.
16. தந்தைதாய்ப் பேண்.
17. நன்றி மறவேல்.
18. இயல்பலா தனசெயேல்.
19. அரவ மாட்டேல்
20. வஞ்சகம் பேசேல்.
21. அழகலா தனசெயேல்.
22. இளமையிற் கல்.
23. அறனை மறவேல்.
24. அனந்த லாடேல்.
25. கடிவது மற.
26. கீழ்மை யகற்று

27. குணமது கைவிடேல்.
28. கூடிப் பிரியேல்.
29. கெடுப்ப தொழி.
30. கேள்வி முயல்.
31. கொள்ளை விரும்பேல்.
32. கோதாட் டொழி.
33. சக்கர நெறிநில்.
34. சான்றோ ரினத்திரு.
35. சீர்மை மறவேல்.
36. சூது விரும்பேல்
37. செய்வன திருந்தச்செய்.
38. சேரிட மறிந்துசேர்.
39. சோம்பித் திரியேல்.
40. தீவினை யகற்று.
41. தெய்வ மிகழேல்.
42. தேசத்தோ டொத்துவாழ்.
43. நன்மை கடைப்பிடி.
44. நீர்விளை யாடேல்.
45. நூல்பல கல்
46. நேர்பட வொழுகு.
47. நோய்க் கிடங்கொடேல்.
48. பாம்பொடு பழகேல்.
49. மேன்மக்கள் சொற்கேள்.
50. வித்தை விரும்பு.



# கொன்றைவேந்தன்.

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
2. ஆலயந் தொழுவது சாலவு நன்று.
3. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
4. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
5. எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்
6. ஏவா மக்கண் மூவா மருந்து.
7. ஐயம் புகினுஞ் செய்வன செய்.
8. கிட்டா தாயின் வெட்டென மற.
9. கீழோ ராயினுந் தாழ வுரை.
10. குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை.
11. கூரம் பாயினும் வீரியம் பேசேல்.
12. கெடுவது செய்யின் விடுவது கருமம்
13. கேட்டி லுறுதி கூட்டு முடைமை.
14. கைப்பொருடன்னின் மெய்ப்பொருள் கல்வி
15. கோட்செவிக் குறளை காற்றுட னெருப்பு.
16. சான்றோ ரென்கை யீன்றோர்க் கழகு.
17. சீரைத் தேடி னேரைத் தேடு.
18. சூதும் வாதும் வேதனை செய்யும்.
19. சேமம் புகினும் யாமத் துறங்கு
20. சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்
21. தந்தைசொன் மிக்க மந்திர மில்லை.
22. தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லை.
23. திரைகட லோடியுந் திரவியந் தேடு
24. தீராக் கோபம் போரா முடியும்.
25. தேடா தழிக்கிற் பாடா முடியும்.

# வெற்ற … கை.

1. எழுத்தறி வித்தவன் இறைவனாகும்.
2. கல்விக்கழகு கசடற மொழிதல்.
3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
4. வேதியர்க் கழகு வேதமும் வொழுக்கமும்.
5. மன்னவர்க் கழகு செங்கோன் முறைமை.
6. உழவர்க் கழகிங் குழுதூண் விரும்பல்
7. மந்திரிக் கழகு வரும்பொருளுரைத்தல்.
8. தந்திரிக் கழகு தறுக ணாண்மை
9. உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்.
10. பெண்டிர்க் கழகு எதிர் பேசாதிருத்தல்.
11. குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்.
12. அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்.
13. வறியோர்க் கழகு வறுமையிற் செம்மை.
14. தேன்படு பனையின் திரள்பழத் தொருவிதை
 வான்பெற வோங்கி வளம்பெற வளரினும்
 ஒருவற் கிருக்க நிழலாகாதே.
15. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
 தெண்ணீர் கயத்துட் சிறுமீன் சினையினும்
 நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
 அணிதேர் புரவி யாட்பெரும் படையொடு
 மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.
16. பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர்.
17. சிறியோ ரெல்லாம் சிறியரு மல்லர்.

பெற்றோ ரெல்லாம் பிள்ளைக ளல்லர்.

ற்றோ ரெல்லாம் உறவின ரல்லர்.

டோ ரெல்லாம் பெண்டிரு மல்லர்.

வின்பால் தன்சுவை குன்றாது.

ான் தன்னொளி கெடாது.

23. அரைக்கினும் சந்தனம் தன்மண மறாது.
24. புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது.
25. கலக்கினும் தண்கடல் சேறா காதே.
26. கற்கை நன்றே கற்கை நன்றே.
27. பிச்சை புகினும் கற்கை நன்றே.
28. அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்.
29. யானைக்கில்லை தானமும் தருமமும்.
30. பூனைக்கில்லை தவமும் தயையும்.
31. ஞானிக்கில்லை இன்பமும் துன்பமும்.
32. சிதலைக்கில்லை செல்வமும் செருக்கும்.
33. முதலைக்கில்லை நீத்து நிலையும்.
34. அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.
35. நாளுங் கிழமையும் நலிந்தோர்க் கில்லை
36. கேளும் கிளையும் கெட்டோர்க் கில்லை.
37. உடைமையும் வறுமையும் ஒருவழிநில்லா.
38. இல்லோ ரிரப்பது மியல்பே யியல்பே.
39. இரந்தோர்க் கீவது முடையோர் கடனே.
40. துணையோ டல்லது நெடுவழி போகேல்.
41. வழியே யேகுக வழியே மீளுக.
42. வாழிய நலனே வாழிய நலனே.

PRINTED AT THE DIOCESAN PRESS, MADR